# ஜெமினி கேண்டீன்

A.N.S. மணியன்

**சாந்தி பதிப்பகம்**
27, அண்ணா சாலை,
சென்னை - 600 002.

| | | |
|---|---|---|
| நூல் தலைப்பு | : | **ஜெமினி கேண்டீன்** |
| ஆசிரியர் | : | **A.N.S. மணியன்** |
| நூல் வகை | : | சுய சரிதை |
| பதிப்பு | : | 2003 |
| நூலின் அளவு | : | 1 x 8 கிரௌவுன் |
| மொத்த பக்கங்கள் | : | 112 |
| தாள் | : | 11.6 K.G. |
| அச்சு எழுத்து | : | 12 புள்ளி |
| பதிப்பாளர் | : | **சாந்தி பதிப்பகம்**<br>27, அண்ணா சாலை,<br>சென்னை - 600 002. |
| விலை | : | ரூ. 30/- |
| ஒளி அச்சு | : | தையல் கிராபிக்ஸ் |
| அச்சிட்டோர் | : | பகவதி ஆப்செட் பிரஸ்<br>சென்னை - 14. |

# பதிப்புரை

இந்தியத் திரைப்பட உலக வரலாற்றில் ஜெமினி என்ற நிறுவனத்திற்கும் அதன் நிறுவனர் திருவாளர் S.S. வாசன் அவர்களுக்கும் புகழ் மிக்க நிரந்தரமான தனி இடமுண்டு.

திரு. S.S. வாசன் அவர்களைப் பற்றியும் அவரது உயர்வான நிர்வாகத்தைப் பற்றியும், அவரது கொடைவள்ளண்மை பற்றியும் திரு. S.V. சகஸ்ரநாமம், திரு. கவிஞர் கண்ணதாசன் போன்றோர் நிறைய எழுதியுள்ளனர்.

ஜெமினியில் ஒரு கேண்டீன், அதில் ஒரு சர்வர். அவருக்கு கல்வியறிவு - நான்காம் வகுப்போடு சரி - ஆனால் படிப்பறிவு தானா சுவையான உணவளிக்கத் தேவை?

சர்வர் நூலகம் நடத்துகிறார். கான்டீனுக்கு உரிமையாளர் ஆகிறார். சிக்கனமாய்ச் செலவு செய்து சேமித்து வைத்து மற்றவர்களுக்கும் பண உதவி செய்கிறார்.

பின் திருமணம் செய்து கொண்டு தனியே கடை வைக்கிறார். மறுபடியும் ஜெமினிக்கே வந்து மெஸ் முதலாளி ஆகிறார்.

ஏராளமான திரைப்படத்துறைக் கலைஞர்களைச் சந்திக்கிறார். அவர்களுக்குச் சுவையான உணவளிக்கிறார்.

ஜெமினியில் நடக்கும் பற்பல நிகழ்வுகளை நேரில் காண்கிறார். அவைகளில் சிலவற்றை மட்டும் நினைவில் உள்ளவரை தயக்கமில்லாமல் இங்கே சொல்கிறார்.

1950 -ல் ஆவடி காங்கிரஸ் மாநாடு, அதில் கோபுரச்சின்னம், ஔவையார் பட ஷூட்டிங் K.B. சுந்தராம்பாள் பற்றிய செய்தி. தில்லானா மோகனாம்பாள் கதைக்கு திரு. சுப்பு அவர்களுக்கே கதை சொன்ன செய்தி - பேரறிஞர் அண்ணா அவர்களைப் பற்றியும் - நடிகர் சந்திரபாபு ஏன் தற்கொலை செய்துகொள்ள முயற்சித்தார் என்பது பற்றியும் திரு.N.S. கிருஷ்ணன் சிறைக்குப் போன விவரம், அவருக்காக புது மாரீஸ் மைனர் கார் வாங்கியது, மிஸ் மாலினி படமும் கார்டூன் படத் தயாரிப்பும் நடந்த கதை—

N.S.K. யே S.S. வாசனுக்கு நோட்டீஸ் அனுப்பியது ஏன்? ஜெமினி கணேசனுக்கு மேக்கப் டெஸ்ட், இதுவரை யாரும் நடத்தியிராத அளவு நடந்த S.S. வாசன் அவர்கள் வீட்டுத் திருமணம், எப்படி நடந்தது? இரும்புத்திரை படத்திற்கு அந்தப் பெயரை வைத்தவர் யார்? நடிகர் திலகம் சிவாஜி கணேசனுடன் தொடர்பு, அவர் ஏன் ஜெமினிக்கு ஒத்துழைக்கவில்லை? நாரதர் சீனிவாசராவ், சந்திரலேகா படத் தயாரிப்பு - சர்க்கஸ் கூடாரமே ஜெமினிக்குள், சாவியும் - மணியனும் - உலகத்தமிழ் மாநாட்டு ஊர்வலம் - 1961 -ல் ஓட்டல் சாப்பாடு டிபன் விலைப்பட்டியல் - பிருத்வி ராஜ்கபூர் - பெயிண்ட் டப்பா திருடியவனும் - மேனேஜர் T.R. ராமையரும் - இப்படி ஏராளமான செய்திகளைக் கொஞ்சம் கூடக் கற்பனை கலக்காமல் சுத்தமான தஞ்சாவூர் டிகிரி காபியைப்போலத் தருகிறார் திரு.A.N.S. மணியன் அவர்கள். சுவைத்தே ஆகவேண்டிய பல்சுவை விருந்து.

பதிப்பாளர்
ஏகம் வேதகிரி





# என் உரை

திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள் டைரக்ட் செய்யும் சில இரவு நேரங்களில் ஷூட்டிங் ஒரு மணிக்கு மேலும் தொடரும். அச்சமயங்களில் செட்டில் (ஷூட்டிங்கில்) இருப்பவர்கள் எல்லோருக்கும் பொங்கலும் தேங்காய்ச் சட்னியும் கொடுக்கும்படி மெஸ்சுக்கு ஸ்லிப் (சீட்டு) வரும். எங்கள் சமையற்காரரை எழுப்பி - பொங்கல் போடச் சொல்வோம். சட்னியும் தயார் செய்வார். அந்தமாதிரி யாரும் செய்ய முடியாது. அவ்வளவு நெய், முழு முந்திரி, மிளகு எல்லாம் போட்டு கமகமவென்று நெய்வாசனையும் மிளகும் சேர்ந்து அந்த வேளையில் சாப்பிடுவது ஆயிரம் கோடி இன்பங்களில் அதுவும் ஒன்று என்று சாப்பிட்டவர்கள் கூறுவார்கள். இதை முதலாளி வாசனும் சாப்பிடுவார். ஹிந்தி நடிகர்கள் தமிழ் நடிகர்கள் எல்லாரும் சாப்பிடுவார்கள். தலைக்கு இரண்டு பிளேட் வீதம் அதாவது 4 இட்லி சேர்ந்தால் எவ்வளவு வருமோ அதைப் போல் இருமடங்கு.

தமிழ்நாட்டின் சின்னமான கோபுரத்தில் ஆரம்பித்து தமிழர்களின் முக்கியப் பண்டிகையான பொங்கலில் இக்கட்டுரையை நிறைவு செய்கிறேன். என் சில அனுபவங்களைப் புத்தகமாக வெளியிட்டு, வாசகனாக இருந்த எனக்கும் வாசகர்களை ஏற்படுத்திக் கொடுத்த உயர்பண்பாளானர் சாந்தி பதிப்பக உரிமையாளர் உயர்திரு. வேதகிரி அவர்கள் என்மீதும் என் குடும்பத்தின்மீதும் சுமார் 25 ஆண்டுகளாக நட்பும் அக்கரையும் வைத்திருப்பவர். அவர்களுக்கு என் வாழ்நாள் முழுவதும் நன்றி சொல்லக் கடமைப்பட்டிருக்கின்றேன்.

இந்த நூலில் சிறுபகுதி 2004 ஜனவரி மாத ஜங்ஷன் இதழிலும் எஸ்.எஸ். வாசன் நூற்றாண்டு மலர் ஆனந்த விகடனிலும் வெளி வந்து இருக்கிறது

வணக்கம்

அன்புடன்
ஏ.என்.எஸ்.மணியன்

# முதற்பகுதி

1950-ஆம் ஆண்டு சென்னை ஆவடியில் காங்கிரஸ் மகாநாடு நடத்த திட்டம்போட்டார்கள் காங்கிரஸ் தலைவர்கள். திட்டம் தீர்மானமாகி தமிழ்நாட்டின் சின்னமான கோபுரம், நுழைவாயிலில் மிகப்பெரியதாக சுமார் 200 அடி உயரத்தில் அமைக்கவேண்டும் என்று எண்ணினார்கள். தமிழ்நாட்டுத் தலைவர்கள் அதற்கு ஒரு கமிட்டி அமைத்து, அதில் தலைவர் காமராஜ், பக்தவத்சலம், சி.சுப்பிரமணியம், டி.கிருஷ்ணமாச்சாரி, ஆர். வெங்கட்ராமன் இன்னும் சில அங்கத்தினர்கள் 'இந்த கோபுரம் பிரம்மாண்டமாய் இருக்க வேண்டிய கோபுரம் தமிழ்நாட்டுச் சின்னம்' என்றனர். இதை அமைக்கும் பொறுப்பை ஜெமினி ஸ்டூடியோ அதிபர் திரு.எஸ்.எஸ். வாசன் அவர்களிடம் ஒப்படைத்தார் தலைவர் காமராஜ் அவர்கள். வாசன் அவர்களும் பெரிதும் மகிழ்ந்து என்னுடைய செலவிலேயே பிரமாதமாக செய்கிறேன் என்று சொல்லிவிட்டார். சில நாட்கள் கழித்து ஆவடி காங்கிரஸ் மகாநாடு நடக்கப்போகுமிடத்தில் ஜெமினி ஸ்டூடியோவைச் சேர்ந்த மிகப் பிரபலமான ஆர்ட் டைரக்டர் திரு.ஏ.கே. சேகர் தலைமையில் நூற்றுக்கணக்கானத் தச்சர்களும் இவர்களுக்கு உதவி செய்ய நூற்றுக்கணக்கான த் தொழிலாளர்களும் மற்றும் இவர்களை வேலை வாங்கும் 3 மேஸ்திரிகளும்

கோபுரத்திற்குத் தேவையான எல்லா உபகரணங்களும் ஜெமினி ஸ்டுடியோவிலிருந்து கொண்டு வரப்பட்டு மிகப் பிரமாதமாகத் தமிழ்நாட்டுக் கோபுரச்சின்னம் கலைமேதை ஏ.கே. சேகரின் எண்ணப்படி செய்து முடிக்கப்பட்டது. இதைப் பார்க்கவே தமிழ்நாட்டில் காங்கிரஸ் மகாநாடு சென்னையில் நடக்கிறபடியால் ஜனங்களுக்கும் கரை கடந்த உற்சாகம். வடநாட்டுத் தலைவர்களுக்கும் இந்தக் கோபுர நுழைவாயில் மிகப் பெரிய பிரமிப்பாய் இருந்தது. பண்டித ஜவஹர்லால் நேரு அவர்கள் சொல்ல ஒண்ணா மகிழ்ச்சி அடைந்து காமராஜ் அவர்களை மிகவும் பாராட்டி, இதை எல்லாம் யார் செய்தது என்று கேட்க, காமராஜ் அவர்கள் திரு.எஸ்.எஸ். வாசனை அறிமுகப்படுத்தி 'இவர்தான் ஜெமினி ஸ்டுடியோ அதிபர் மற்றும் தீவிரமான தேசியப் பத்திரிகை ஆனந்த விகடன் ஆசிரியரும் இவர்தான்' என்று சொன்னார். நேரு வாசனின் இரு கரங்களையும் பிடித்து நன்றி சொன்னார். ஐந்து நாட்கள் பிரமாதமாக நடந்த இந்த மகாநாட்டில்தான் ஜனநாயக சோஷலிசம் என்ற மந்திர வார்த்தை உதயமானது.

இந்த மகாநாடு நடந்து சில நாள்கள் கழித்து திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள் எம்.பி.ஆனார் (சிவாஜியும், சோவும் ஆன மாதிரி) நேரு வாசன் அவர்களைப் பற்றி முன்பே கேள்விப்பட்டிருந்தார். மகாத்மா காந்தி நிதிக்கு 1 லட்சம் நிதியும், கஸ்தூரிபாய் நிதிக்கு 25 ஆயிரம் கொடுத்ததையும் அறிவார். ஆனால் சந்திப்பு இப்பொழுதுதான் ஆவடியில் நடந்தது. இந்த கோபுரம் கட்டிய தொழிலாளர்களுக்கும் மற்ற டைரக்டர்களுக்கும் ஜெமினி ஸ்டுடியோ மெஸ்ஸிலிருந்து 400 பேர்களுக்கும் காலை டிபன், பகல் உணவு, மாலையில் காபியும், இரவு உணவும் தயார் செய்து கொண்டு லாரியிலும், வேன் மூலமாகவும் கொண்டுபோய் பரிமாறும் வேலை எங்களுடையது. (நான் ஜெமினி மெஸ்சில் வேலை செய்து

கொண்டிருந்தேன்.) இந்தத் தொழிலாளர்களுக்கு ஒரு குறையும் இல்லாமல் உணவு வேளை தவறாமல் ஜெமினி மெஸ் பொறுப்பேற்றது, திரு.வாசன் அவர்கள் உத்திரவுப் படி...

★ ★ ★

கிண்டி கவர்னர் மாளிகையில் அடர்ந்த காட்டு பகுதி ஒன்று இருக்கிறது. இங்கு ஷூட்டிங் நடத்த அனுமதி ஜெமினி ஸ்டூடியோவிற்கு மட்டும்தான். இங்கு ஒருநாள் ஔவையார் ஷூட்டிங் நடந்தது. கே.பி.சுந்தராம்பாளும் மற்றும் எம்.எஸ். சுந்தரிபாய் இவர்கள் சம்பந்தப்பட்ட காட்சிகள் படமாக்கப்பட்டது. அப்பொழுது சென்னை கவர்னராக இருந்தவர் ஸ்ரீபவ நகர் மகாராஜா அவர்கள். ஜெமினியின் ஔவையார் ஷூட்டிங்கைப் பார்க்க விருப்பம் தெரிவித்து ராஜாவும், ராணியும், மகனும் வந்தார்கள். திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள் மிக்க மகிழ்ச்சியுடன் ராஜ தம்பதிகளை வரவேற்று அவர்களுக்கு நாற்காலிகள் போட்டு வெய்யில் தெரியாமல் இருக்க பெரிய குடைகளை இரண்டு ஆள் பிடித்து நிற்க ஏற்பாடு செய்தார்.

மெஸ்சில் காலை டிபன் சாப்பிட்டு விட்டு, ஷூட்டிங்கில் சம்பந்தப்பட்டவர்கள் காலை 7 மணிக்கு காரிலும் வேனிலும் லாரியிலும், ஆட்கள், ஷூட்டிங்கிற்கு தேவையான சாமான்களுடன் நடிக, நடிகைகளும் மேக்கப் செய்து பின் காட்சிக்கேற்ற... உடைகளும் அணிந்து தனியாக ஸ்டுடியோ காரில் ஸ்பாட்டுக்குப் போய்விட்டார்கள். எங்கள் மெஸ்சிலிருந்து ஒருவர் இரண்டு முறை காபிக்கு தேவையான பால், டிகாஷன், சர்க்கரை, அடுப்பு + கரி + கெரசனி, பால் காய்ச்ச பாத்திரம், தண்ணீர், கரண்டி, காபி கொடுக்க பித்தளை டம்ளர் (இரண்டு முறை என்பது ஷூட்டிங்கில் இருக்கும்

எல்லா நபர்களுக்கும் இருக்கும் எண்ணிக்கைக்குத் தக்கபடி இரண்டு மடங்கு) இவைகளுடன்தான் பயணமானேன். காபிக்கு ஒருவர் மட்டும்தான். மதிய உணவிற்கு மற்றொரு மெஸ் ஆள் வருவார். மற்றபடி எங்களுக்கு உதவிக்குத் தனியாக இரண்டு வேலையாட்கள் இருப்பர்.

வாசன் அவர்கள் என்னைக் கூப்பிட்டு காப்பி போட்டு முதலில் ராஜ தம்பதிகளுக்குக் கொடுக்கச் சொன்னார். நான் சுமார் 10 நிமிடங்களில் மளமளவென்று அடுப்பைப் பற்ற வைத்துச் சுடச்சுட தஞ்சாவூர் டிகிரி காபியை பளபளவென்று நானே தேய்த்த பித்தளை டம்ளர்களில் ஊற்றி ஒரு தாம்பளத்தில் வைத்து எடுத்துகொண்டு முதலில் ராஜ தம்பதிகளிடம் நீட்டினேன்.

இதைச் சற்றும் எதிர்பாராத பவநகர் ராஜா வாசன் அவர்களை பார்த்தார். வாசன் அவர்கள் எங்கள் தஞ்சாவூர் காபியை சாப்பிட்டு பாருங்கள் என்று ஆங்கிலத்தில் சொல்லவும் ராஜாவும் காபி எடுத்து ராணியிடமும் மகனிடமும் கொடுத்து தானும் எடுத்து கொண்டு ஒரு வாய் பருகிவிட்டு 'எக்ஸலண்ட் காபி' என்றார். வாசனும் காபியைப் பருகியபடி ராணி அவர்களைப் பார்க்க அவர்களும் 'பைன்' என்றார்கள். பின் கவர்னர் அவர்கள் ஔவையார் கதையைப் பற்றி வாசனிடம் கேட்டு தெரிந்துகொண்டு முக்கால் மணிநேரம் ஷூட்டிங் பார்த்து விட்டு வாசனிடம் விடைபெற்று சென்றுவிட்டார்.

இந்த அவுட்டோர் ஷூட்டிங் சம்பந்தப்பட்டவர்களுக்கு ஜெமினி மெஸ்சின் பகல் உணவு எப்படி என்பதை பார்ப்போம். ஷூட்டிங் இன்ன இடத்தில் இன்ன தேதியில் நடக்கப் போவதை முன்கூட்டியே மெஸ் டிபார்ட் மென்ட்டுக்கு, என்ன என்ன தேவை எத்தனை பேர்களுக்கு என்று ஷூட்டிங் நடப்பதற்கு முதல் நாள் காலை 9 மணிக்குள்

தகவல் எழுத்து மூலம் புரோக்கிராம் டிபார்ட்மென்ட்லிருந்து அனுப்பிவிடுவார். இதற்கு மெஸ் ஸ்லிப் என்று பெயர். இதில் படத்தின் பெயரும் இருக்கும். ஏனென்றால் இந்த உணவு வகைகளை அந்தப் படத்தின் செலவில் சேர்ப்பதற்காக நாங்கள் ஒவ்வொன்றின் விலைப்படி கொடுப்போம். அவுட்டோர் என்றால் எல்லா காய்கறிகளும் சேர்த்து அருமையான சாம்பார் சாதம் மணக்கும் நெய்யுடன், மொறு மொறுவென்று மெதுவடையும், உருளைகிழங்கு வறுவல், ஒரு பொறியல் + வெண்ணையும் பாலும் தயிரும் சேர்ந்து தயிர் சாதம் ஊறுகாய் இவைகளை பகல் 12 மணிக்குள் சாப்பிடுவதே ஒரு பேரானந்தம். இந்த உணவு வகைகள்தான் முதலாளியான வாசன் அவர்களுக்கும். பெயர் பெற்ற நடிகர் நடிகையர்க்கும் ஒரே மாதிரி வித்யாசம் இல்லாத சமபந்தி போஜனம் முதலில் அறிமுகப்படுத்தியது ஜெமினி ஸ்டூடியோ மெஸ்தான்.

★ ★ ★

கே.பி.சுந்தராம்பாள் அவர்களின் உயர்ந்த பண்பாட்டை ஒரு உதாரணம் மூலம் சொல்கிறேன். முதலில் டைரக்டர்கள், நடிகர்கள், எல்லாருக்கும் பரிமாறிவிட்டு நாங்கள் 4 பேரும் கடைசி பந்தியில் சாப்பிடுவோம். அப்பொழுது கே.பி.எஸ். அவர்கள் கையில் சாதம் உள்ள பாத்திரத்தை எடுத்து வந்து எங்களுக்குப் பரிமாறுவார். நாங்கள் தடுத்தாலும் கேட்க மாட்டார். இவரைப் பார்த்து மற்ற டெக்னீஷியன்களும் பரிமாற வந்துவிடுவார்கள். இத்தகைய உயர்ந்த உள்ளம் படைத்த கே.பி.எஸ். அவர்களுக்கு ஜெமினி மெஸ்சின்மீது ஒரு விரும்பத்தகாத நிகழ்ச்சி மூலம் வருத்தம் ஏற்பட்டுவிட்டது.

ஒரு நாள் காலை 9 மணியிலிருந்து மாலை6 மணி வரை ஷூட்டிங் 10 நாட்கள் ஷெட்யூல்படி நன்றாக நடந்து வந்தது. கடைசி 10வது கால்ஷீட்டு கே.பி.எஸ்., எம்.கே.ராதா

ஜெமினி கணேஷ் இன்னும் பலர் நடித்தார்கள். அன்று 10 நாட்கள் ஔவையார் ஷூட்டிங் மாலையுடன் முடித்து எல்லோரும் அவரவர் வீட்டுக்குப் போய்விட்டார்கள். இரவு வேளை ஷூட்டிங் ஏதுவும் இல்லாததால் இரவு ஏழரை மணிக்கு ஒருவர் கையில் டிபன் காரியருடன் வந்தார். மெஸ்சில் அன்றைய கணக்குகளை எழுதிக் கொண்டிருந்த கோபாலகிருஷ்ணனிடம் கே.பி.எஸ். அம்மா இரண்டு பேருக்கு சாப்பாடு வாங்கி வரச்சொன்னார்கள் என்று கேட்டார். கோபாலகிருஷ்ணன் சாப்பாட்டைக் கொடுத்து விட்டு ஔவையார் படக்கணக்கில் எழுதி இருக்கலாம். அவரை யாரும் கணக்கு கேட்கமாட்டார்கள். ஆனால் அவரோ சாப்பாடு கேட்டவரிடம் பக்கத்தில் உள்ள புரோகிராம் ஆபீஸில் போய் சீட்டு வாங்கிக்கொண்டு வாருங்கள் என்று கூறிவிட்டார். வந்தவர் புரோகிராம் ஆபீசுக்குப்போய் அங்கு இரவு டியூட்டியில் இருந்த வரதாச்சாரி என்ற புரொடக்ஷன் உதவியாளரிடம் கே.பி.எஸ். அம்மா இரண்டு பேர்களுக்கு சாப்பாடு வாங்கிக் கொண்டு வரச்சொன்னார்கள் என்றும் மெஸ்சுக்கு போய் கேட்டதற்கு தங்களிடம் சீட்டு வங்கி வரும்படி கூறினார் என்றும் கோபாலகிருஷ்ணன் சொன்னதை அப்படியே ஒப்புவித்தார். ஷூட்டிங் 6 மணிக்கு முடிந்துவிட்டது, இப்பொழுது சாப்பாடு கொடுப்பது வழக்கம் இல்லை என்று உதவியாளர் கச்சிதமாக ஜெமினி ஸ்டுடியோவின் சட்டத்தைச் சொல்லிவிட்டார். வந்தவர் எவர்சில்வர் காரியருடன் வவர் அந்த காரிலேயே போய்விட்டார்.

இரண்டு மாதங்கள் இடைவெளிக்குப் பிறகு ஔவையார் ஷூட்டிங் மாலை 6 மணி முதல் இரவு 2 மணி வரை ஒரு வாரம். ஷெட்யூல்படி 3 மணிக்கே மேக்கப் போட வேண்டும். கே.பி.எஸ். மட்டும் எப்பொழுது வந்தாலும் திரு.கொத்த மங்கலம் சுப்பு அவர்களை முதலில் பார்த்துவிட்டு அன்றைய

காட்சிகள் பற்றியும், தான் பேசவேண்டிய வசனங்களையும் வாங்கிக் கொண்டுதான் மேக்கப் ரூமுக்குப் போவார். அன்றும் அப்படிதான் நடந்தது. சுப்பு உடன் பேசி முடிந்ததும் கே.பி.எஸ். அவர்கள் 'ஏன் சுப்பண்ணா ஸ்டுடியோவில் ஏதாவது மாற்றம் இருக்கிறதா? யாராவது புதிய மானேஜர் வந்திருக்கிறாரா' என்று கேட்டார். 'அப்படி ஒன்றும் மாறுதல் இல்லை. புதிய மானேஜரும் இல்லையே! ஏன் உங்களுக்குச் சந்தேகம்' என்று கேட்டார் சுப்பு. 'ஒன்றும் இல்லை. ஒரு நாளைக்கு என் வீட்டு தவசுப் பிள்ளைக்கு (சமையல்காரர்) உடம்பு சரி இல்லை. அவனால் சமைக்க முடியாதுபோல் தோன்றியதால் ஸ்டுடியோ மெஸ்சிலிருந்து 2 பேருக்குச் சாப்பாடு வாங்கி வா என்று சொல்லி கேரியர் கொடுத்து அனுப்பினேன். ஷூட்டிங்கும் இல்லை. சாப்பாடும் இல்லை என்று திரும்பிவிட்டார்கள். உங்கள் மெஸ்சில் நன்றாக இருக்கும்; வெளி ஒட்டல் சாப்பாடு சாப்பிட்டுப் பழக்கம் எனக்கு இல்லாததால் அனுப்பினேன்' என்றார் கே.பி.எஸ்.

சுப்பு அவர்கள் முகம் சுருங்கிவிட்டது. ஏதோ தனக்கு ஏற்பட்டதுபோல் நினைத்துக்கொண்டு விட்டார். அதற்குள் கே.பி.எஸ் மேக்கப்புக்குப் போய்விட்டார். சிறந்த தேசியவாதியான சுப்பு அவர்கள் கே.பி.எஸ்ஸுக்குச் சாப்பாடு இல்லை என்ற நிலைக்கு யார் காரணம் என்று அறிய முயன்று முதலாளி வாசன் அவர்களிடம் உடன் சொல்லி விசாரிக்கவேண்டும் என்று சொல்லிவிட்டார். எப்பொழுதும் கதர் அணிபவர்கள் இருவர் மனமும் சில விஷயங்களில் ஒன்றாகவே இருக்கும்.

சில வினாடிகளுக்கு திரு.எஸ்.எஸ்.வாசன் அவர்களின் அறையில் புரோகிராம் ஆபீஸ் வரதாச்சாரி கைகளைக் கட்டியபடி முதலாளி வாசன் அவர்களின் கேள்விகளுக்குத் தயங்கியபடியே பதில் அளித்துக் கொண்டிருந்தார்.

எஸ்.எஸ்.வி. : எத்தனை வருஷங்ககளாக வேலை செய்கிறாய்?

வ.: மூன்று வருஷங்களாக

எஸ்.எஸ்.வி : மெஸ்சில் ஒரு சாப்பாடின் விலை என்ன தெரியுமா?

வ. : தெரியும். ஒரு சாப்பாட்டின் விலை முக்கால் ரூபாய் (பனிரண்டணா)

எஸ்.எஸ்.வி.: அந்த காலத்திலேயே ஒரு படத்திற்கு லட்ச ரூபாய் சம்பளம் வாங்கிய பெரிய நடிகை கே.பி.எஸ். அவருக்குக் கேவலம் ஒன்றரை ரூபாய் பெறுமான சாப்பாட்டை இல்லை என்று சொல்லி எனக்கும் என் ஸ்டுடியோவிற்கும் அவமானம் ஏற்படுத்திவிட்டாய் போ. இன்றுடன் உன் கணக்குக் தீர்ந்துவிட்டது. புரடக்ஷன் டிபார்ட்மென்டுக்கு நீ லாயக்கற்றவன். அன்பிட் என்று ஆங்கிலத்தில் சொல்லிவிட்டு ஜெனரல் ஆபீசுக்கு போய் உன் கணக்கைத் தீர்த்துக் கொள் என்று பேச்சை முடித்துக் கொண்டார்.

அடுத்தவர் மெஸ் கோபாலகிருஷ்ணன்

எஸ்.எஸ்.வி.: எத்தனை வருஷங்களாக மெஸ்சில் வேலை செய்கிறாய்?

கோ. : ஸ்டுடியோ ஆரம்பித்ததிலிருந்தே வேலை செய்து வருகிறேன்.

எஸ்.எஸ்.வி.: இவ்வளவு சர்வீஸ் ஆகியும் என்ன பிரயோசனம்? பல லட்ச ரூபாய் போட்டு ஔவையார் படம் எடுக்கிறேன். தமிழ்நாட்டின் செல்வாக்கு நிறைந்த கே.பி.எஸ்ஸுக்கு ஒன்றரை ரூபாய் சாப்பாடு இல்லை என்று சொல்லிவிட்டாய். நீ கம்பெனிக்கு லாபம் பார்த்தாய்.

ஔவையார் படம் பல லட்சங்களைச் செலவு செய்து எடுத்த படம். இதன் காரணமாக ஷூட்டிங்குக்கு அவர் ஒத்துழைப்பு கொடுக்காவிட்டால் என்ன ஆகும் தெரியுமா? உன்னுடைய சர்வீஸ் காலணா பெறாது. அது சரி ஔவையார் ஷூட்டிங் இல்லை, எனவே சாப்பாடும் இல்லை என்று கே.பி.எஸ்ஸுக்கு கூறிவிட்டீர்கள். தினசரி என் கணக்கில் காபி, டிபன் எல்லாவற்றிற்கும் பில் போட்டு அனுப்புகிறாயே? அந்த கணக்கிலாவது இரண்டு சாப்பாடு கொடுத்திருக்கலாமே? ஏன் அதையும் செய்யவில்லை? (ஐயர் கணக்கு என்று ஒன்று உண்டு. வாசன் அவர்களைக் காண வருகிறவர்களுக்கு காபி, டிபன் கொடுத்து ஐயர் கணக்கு என்று பில் போட்டு அனுப்பிவிடுவோம். இதைத்தான் எஸ்.எஸ்.வி. அவர்கள் என் கணக்கிலாவது கொடுத்திருக்கலாமே என்று கேட்டார்.) எனவே நீயும் தவறு செய்துவிட்டாய். உனக்கும் இன்றுடன் வேலை இல்லை. கணக்கு தீர்த்துக் கொண்டு போய்விடு என்று வெளியே அனுப்பி விட்டு வேறு வேலையில் கவனம் செலுத்தலானார் வாசன் அவர்கள்...

மேக்கப் போட்டுக் கொண்டிருந்த கே.பி.எஸ். அவர்கள் மேக்கப் மேன் சகாதேவராவைப் பார்த்து என்ன என்று கேட்டார். சகாதேவராவும் அருகில் இருந்த ஆபீஸ் பையனைப் பார்த்து 'என்னப்பா எல்லாரும் கூடிக்கூடி பேசிக்கொள்கிறார்களே உனக்கு ஏதாவது தெரியுமா?' எனக் கேட்டார். அதற்கு அந்த ஆபீஸ் பையன் சொன்ன பதில்: மெஸ் கோபாலகிருஷ்ணன், புரோகிராம் வரதாச்சாரி இரண்டு பேர்களை ஐயர் சீட்டு கிழித்துவிட்டாராம். யாருக்கோ சாப்பாடு இல்லை என்று இவர்கள் சொன்னார்களாம். அதனால் இருவருக்கும் வேலை போயிற்று என்று அரைகுறையாக அவனுக்குத் தெரிந்ததைச் சொன்னான். இதை கேட்டுக் கொண்டிருந்த கே.பி.எஸ். அவர்கள் ஒரு

கணம் தலையில் விரலை வைத்தபடி யோசித்துக்கொண்டே மேக்கப் சகாதேவராவைப் பார்த்து கொஞ்சம் இருங்கள் இதோ வந்துவிடுகிறேன் என்று இருக்கையை விட்டு இறங்கி வேகமாக நடந்தார். திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள் ரூமுக்குள் சென்றார். அங்கு அமர்ந்து ஏதோ எழுதிக் கொண்டிருந்த வாசன் அவர்களைப் பார்த்து சற்று உரத்த குரலில், 'என்னண்ணா என்ன காரியம் செய்துவிட்டீர்கள்' என்று கேட்டார். வாசன் அவர்கள் அரைகுறை மேக்கப்புடன் கே.பி.எஸ். அவர்களைக் கண்டதும் பதறியபடி இருக்கையை விட்டு எழுந்தபடியே 'வாருங்கள், வாருங்கள்' என்று வரவேற்றார். இதற்குள் வாசன் அறைக்கு வெளியே ஐந்தாறு பேர் வழியில் நின்றுகொண்டிருந்தார்கள். அவர்களில் கோபாலகிருஷ்ணனும், வரதாச்சாரியும் மேக்கப் சகாதேவ ராவும் காணப்பட்டனர்.

வாசன் அவர்களுக்கு முதலில் ஒன்றும் புரியாமல் 'என்னம்மா கே.பி.எஸ், உங்களுக்கு என்ன பிரச்சினை? இங்கே வந்ததற்கு அவசரமாக ஏதாவது காரணம் உண்டா என்று கேட்டார்.' 'ஆம்! அவசரம்தான். முதலில் நீங்கள் இரண்டு பேரை வீட்டுக்கு அனுப்பப்போட்ட உத்தரவை மாற்றுங்கள். என்னால் இரண்டு குடும்பங்களின் விளக்க ணைத்த பாவம் வரவிடமாட்டேன். எனக்கு ஒருவேளை சாப்பாடு மறுத்தவர்களுக்கு, நீங்கள் நிரந்தரமாகவே சாப்பாட்டை மறுத்தது நியாயம் இல்லை. உடனே உங்கள் உத்தரவை மாற்றுங்கள்' என்று மீண்டும் வற்புறுத்தவே, வாசன் அவர்கள் மனம் மாறி 'சரி நீங்கள் சொன்னபடியே செய்கிறேன்' என்றார். மேஜைமேல் இருந்த தொலை பேசியை எடுத்து யாரிடமோ ஏதோ கூறிவிட்டு வாருங்கள் என்று அழைத்தபடியே வெளியே வந்தார்கள் இருவரும். அப்பொழுது கோபாலகிருஷ்ணனும், புரோகிராம்

வரதாச்சாரியும் கே.பி.எஸ். அவர்களுக்கு நமஸ்காரம் செய்யக் குனிந்தார்கள். இதைக் கண்ட கே.பி.எஸ். அவர்கள், அவர்களை நோக்கி வாசன் அவர்கள் இருந்த பக்கத்தை காண்பித்து 'அவருக்கு நமஸ்காரம் செய்யுங்கள். அவர்தான் உங்களுக்கும் எனக்கும், இன்னும் எவ்வளவோ பேர்களுக்கும் சாப்பாடு போடுகிறார்' என்று மகிழ்ச்சியுடன் கூறினார்.

சில நேரங்களில் சில மனிதர்களின் உயரிய மனப்பண்பும் மனிதாபிமானமும் நன்கு வெளிப்படுகின்றன என்பதை இத்தகைய சம்பவங்கள் எடுத்துக்காட்டுகின்றன.

★ ★ ★

ஜெமினி கதை இலாகாவின் அசைக்க முடியாத தூணாக இருந்தவர் திரு. கொத்தமங்கலம் சுப்பு அவர்கள். காந்தி மகான் கதையை வில்லுப் பாட்டு வடிவத்தில் அமைந்து தமிழ்நாடெங்கும், ஏன் மலேயா, சிங்கப்பூர், இலங்கை எல்லா நாடுகளிலும், காலட்சேபம் செய்து, கேட்பவர் அனைவரையும் ஒருவர்கூட பாக்கியில்லாமல் அழவைக்கும் திறமை படைத்தவர். கவிஞர், நடிகர், கதை வசனகர்த்தா, டைரக்டர், பேச்சாளர். இவ்வளவும் இருந்தும் திரை உலகில் மறைக்கப்பட்டுவிட்டார். காரணம் ஜெமினியில் நிரந்தரமாக தன் ஆயுள் முழுவதும் இருந்துவிட எண்ணினாரோ என்னவோ!

நடிகர் திலகத்தின் மிகச் சிறந்த படங்களில் ஒன்றான தில்லானா மோகனாம்பாள் ஆனந்த விகடனில் தொடர் கதையாக வந்தபோதே அது மிகப் பிரமாதமான வரவேற்பைப் பெற்றது. அந்தக் கதைக்கு வாசன் அவர்கள் தனி கவனம் செலுத்திப் பிரமாதமாக விளம்பரம் செய்தார். ஓவிய மேதை கோபுலு அவர்களின் சித்திரங்களும் வாசகர்களுக்கு பெரும் விருந்தாக இருந்தது.

கல்கி அவர்களுடைய தொடர் கதைக்கும் தேவன் அவர்களுடைய தொடர் கதைக்கும் வெள்ளிக் கிழமை எப்பொழுது வரும் என்று வாசகர்கள் காத்திருப்பார்கள். அடுத்தபடியாக திரு.கொத்தமங்கலம் சுப்புவின் தில்லானா மோகனாம்பாள்தான். ஏனோ கலைமணி என்று புனைப் பெயர் வைத்துக்கொண்டார். விகடனில் சுப்பு அவர்கள் தொடர்கதை எழுதிக்கொண்டிருந்த நாட்களில், நான் ஜெமினி ஸ்டூடியோ மெஸ்ஸில் வேலை செய்து கொண்டிருந்தேன் சர்வராக. சுப்பு அவர்கள் பகல் டிபன் சாப்பிட வருவார். அன்று அவருக்கு நானே சிற்றுண்டியைக் கொடுத்தேன். அன்று வெள்ளிக்கிழமை, டிபன் சாப்பிட்டு விட்டு இந்த வாரம் தில்லானா மோகனாம்பாள் கதை படித்தாயா? எப்படி இருந்தது, என்று கேட்டார். அவர் ஒவ்வொரு வாரமும் வெள்ளிக்கிழமை கதையைப் பற்றி என்னிடமும் சர்வராக வேலை செய்யும் மற்றொருவன் கிருஷ்ணனிடமும் கேட்பார். நாங்கள் சொல்வதைக் கவனமாக குறித்துக் கொள்வார். எங்கள் மெஸ்ஸுக்கு வாராவாரம் ஆனந்த விகடனும் நாரதர் என்ற சினிமா பத்திரிகையும் இலவசமாகக் கொடுக்கும்படி திரு.எஸ்.எஸ்.வாசன் அவர்கள் உத்தரவு போட்டிருந்தார். மெஸ் சூப்ரண்டன்ட் டி.ஆர்.ராஜகோபால ஐயர் வாசன் அவர்களுக்குத் தூரபந்து. அவர் கேட்டுக் கொண்டதின்பேரில் ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் விகடனும், நாரதர் பத்திரிகையும் எங்களுக்கு இலவசமாகக் கிடைத்து வந்தது.

அன்றையதினம் திரு.சுப்பு அவர்கள் என்னிடம் ஒரு கேள்வியைக் கேட்டார். தில்லானா மோகனாம்பாள் கதையில் மோகனாம்பாளை சண்முகசுந்தரமும், ஒரு மகாராஜாவும் காதலிக்கிறார்கள். ஆனால் தில்லானா மோகனாம்பாள் ஷண்முகசுந்தரத்திடம்தான் தன் உள்ளத்தைக் கொடுத்தாள். மோகனாவின் நாட்டியத்தைப் பார்த்த ஊரில் பிரபலமான மைனர் பாலாஜியும் அவளை அடைய ஆசை கொள்கிறான்.

டிபனைச் சாப்பிட்டபடியே சுப்பு அவர்கள் இந்தப் பணக்கார மைனருக்கு ஏற்கனவே விவாகம் ஆகியிருந்தும் மோகனாம்பாள்மீது மோகம் கொண்டார்; மைனர் என்ன செய்ய போகிறார் என்று என்னிடம் கேள்வி கேட்டார்.

நான் பதிலை இப்படிச் சொன்னேன்: சார் தில்லானா மோகனாம்பாளும் சண்முகசுந்தரமும் ஒருவருக்கொருவர் உயிராக நேசித்துக்கொள்வதை அறிந்ததும், பண்புமிக்க குடும்பத்தில் பிறந்த மைனர் தில்லானா மேகனாம்பாள்மீது தான் கொண்ட மோகத்தை அவள்மீது சகோதரி பாசமாக மாற்றிக் கொள்கிறார் என்று நான் கூறிய பதிலைக் கேட்டதும் பாதி டிபன் சாப்பிட்டுக்கொண்டிருந்த அவர் அப்படியே எழுந்து என்னைச் சேர்த்து அணைத்து நான் நினைத்ததை அப்படியே சொல்லிவிட்டாயே என்று சொல்லியபடி மீதி டிபன் காபியும் சாப்பிட்டு விட்டுச் சென்றுவிட்டார். நான் பெரிய புத்திசாலியாக நானே நினைத்துக்கொண்டேன்.

அடுத்த வாரம் வெள்ளிக்கிழமை விகடனில் தொடர்கதை தில்லானா மோகனாம்பாளில் மைனர் மனம் மாறி தில்லானா மோகனாம்பாள் ஷண்முகசுந்தரத்தின் திருமணத்தை நடத்த ஏற்பாடுகளைச் செய்யும் கோஷ்டியில் மைனரும், ராஜாவும்ச் இருப்பதாக கதை போகிறது.

★ ★ ★

ஒரு நாள் நான் உணவு பரிமாறிக்கொண்டிருந்த வேளையில் ஆ.ஏ. விஜயராவ் என்ற ஒரு உதவி டைரக்டர் வந்தார். அவர் தாய்மொழி கன்னடம். சிறு சிறு வேடங்களை நன்றாக செய்து வாசன் அவர்களிடம் நல்ல பெயர் வாங்குபவர். சுமார் 3 வருடங்களாக ஸ்டூடியோவில் நிரந்தரப் பணியில் இருந்து வருகிறார். அவர் என்னிடம் நன்றாகப்பழகுவார். அவர் ஒரு நாள் என்னைப் பார்த்து,

'என்னப்பா மணி எப்பொழுதும் புத்தகம் படித்துக்கொண்டி ருக்கிறாயே? ஏதாவது பரிட்சை எழுதப்போகிறாயா?' என்று உண்மையாகவே கேட்டார். அதற்கு நான் 'இல்லை சார், பரிட்சை என்னால் எழுத முடியாது. ஏனென்றால் என் பள்ளி படிப்பு 4ம் வகுப்புடன் அதுவும் கார்ப்பரேஷன் பள்ளியுடன் முடிந்துவிட்டது. நம் லைப்ரரியிலிருந்து கதைப் புத்தகம்தான் படித்துக் கொண் டிருக்கிறேன் சார். இதுதான் எனக்கு பிடித்த பழக்கம். புகை பிடித்தல், வெற்றிலை என்று வேறு பழக்கம் எனக்கு கிடையாது சார்' என்று நான் சொன்னதும், அவர் 'அப்படியா ரொம்ப சந்தோஷம். எங்கே இப்படி வந்து உன் வலது உள்ளங்கையைக் காட்டு என்று சொல்லியபடியே என் வலது உள்ளங்கையைப் பிடித்து அதில் உள்ள ரேகைகளைப் பார்த்தார். சில நிமிஷங்கள் பார்த்துவிட்டு அடேயப்பா நீ மட்டும் படித்திருந்தால் எம்.ஏயைத் தாண்டியிருப்பாய். இன்னும் சில மாதங்கள் பொறுத்து நீ சொந்தமாக வியாபாரம் செய்வாய்! உன் கை சம்பளம் கொடுக்கும் கை. சம்பளம் வாங்கும் கை சில மாதங்களுக்குப் பிறகு மாறிவிடும்' என்று சொன்னார்.

இரண்டே மாதங்களில் விஜயராவ் சொன்னபடியே என் சகோதரர் என்னைக் காணவந்தார். சகோதரர் மவுண்ட்ரோடில் இருந்த மை காபி பார் (பின் நேரு கேப்பாக மாறியது. இப்பொழுது தேவி பாரடைஸ் இருக்கும் முன்புறம்போலீஸ் ஆபீஸ் எதிரில் இருந்தது.) ஓட்டலில் வேலை செய்து கொண்டிருந்தார். பக்கத்தில் சுகுண விலாச சபை கட்டிடமும், கிளப்பும், பேட்மிண்டன் மைதானமும், எல்லாம் இருந்தது. திரு. ராவ் பஹதூர் சம்பந்த முதலியார் அவர்களின் முயற்சியால் அந்த சபா நாடகக்கலைக்காகவே வாங்கப் பட்டது. இப்பொழுது அங்கு நாடகம் நடத்துவதற்கு பெரிய மேடையும் இருக்கும். தவிர மற்ற கேளிக்கை அம்சமும்

இருந்தன. அவர்களுக்காகவே ஒரு கேண்டீனும் இருந்தது. சபா அங்கத்தினர்கள் பகல் 12 மணியிலிருந்து சபாவிற்கு வர ஆரம்பிப்பார்கள். அவர்களுக்காக 12 மணியிலிருந்து இரவு 10 மணி வரை கேண்டினில் டிபன், காபி, சோடா, கலர், சிகரெட், வெற்றிலைபாக்கு உள்பட எல்லாம் கேண்டீனில் இருக்கவேண்டும். இந்த காண்டீனை நடத்தும்படி சபா காரியதரிசி என் சகோதரரிடம் சொல்லி விட்டார். அதுவும் 1-ந்தேதி முதல்; அவர் சொன்னது, 28 -ம்தேதிதான். இதற்காக என் சகோதரர் எனக்கு தொலைபேசி மூலம் கூறி, என்னை உடனே வரும்படி சொன்னார். நான் மெஸ் சூப்ரண்டன்டிடம் ஒரு மணி நேரம் பர்மிஷன் கேட்டு சகோதரரைப் போய்ப் பார்த்தேன். விவரமாக எல்லாம் என்னிடம் சொல்லி நீ ஒரு மாதம் லீவு போட்டுவிடு என்றார்.

எம்.பி. திரு.எஸ்எஸ். மாரிசாமியின் அந்தரங்க நண்பர் ராமலிங்க செட்டியாரும் மற்றுமுள்ள S.V.S. அங்கத்தினர்கள் பெரும்பாலும் என் சகோதரர் பணிபுரியும் நேரு கேப்புக்குத்தான் சிற்றுண்டி சாப்பிட வருவார்கள். அனைவரும் என் சகோதரர் சப்ளை செய்யும் டேபிளுக்கே வந்து அமர்வார்கள். என் சகோதரர் அந்த ஓட்டலில் ஒரு ஸூப்பர் ஸ்டார் சப்ளையர். காபி சாப்பிடலாம் என்று வருபவர்களை வயிறார சிற்றுண்டி சாப்பிட வைத்துவிடும் அவருடைய அணுகுமுறை. இப்படியாக சுகுண விலாச சபா கேண்டீனும் என் சகோதரருக்கு கிடைத்தது; மேலும் இந்தியன் எக்ஸ்பிரஸ், தினமணி, ஆந்திர பிரபா, தினமணி கதிர் இந்தப் பத்திரிக்கை அலுவலகங்கள் மவுண்ட் ரோட்டில் மதராஸ் கிளப் என்று அழைக்கப்பெறும் பெரிய கட்டிடம், மேல்படி தினமணி எக்ஸ்பிரஸ் ஆபீசுகள் தவிர இப்பொழுது அண்ணாசாலையில் உள்ள P.M.G. ஆபீசும், தேனாம் பேட்டையில் உள்ள *Account General Office*-ம் மதராஸ்

கிளப்பில் இருந்தது. இதைத் தவிர *T.U.C.S.* என்று அழைக்கப்படும் கூட்டுறவு அங்காடியின் கிடங்கும் அங்கே இருந்தன. இந்த மதராஸ் கிளப் வெள்ளையர்கள் ஆண்டகாலத்தில் ஆங்கிலேய அதிகாரிகளுக்காகக் கட்டப் பட்டது. ஆங்கிலேயர்கள் நாட்டைவிட்டு வெளியேறியதும். அந்தக் கட்டிடம் மூன்றரை லட்சம் ரூபாய் விலைக்கு விற்றுவிட அதை நடத்தியவர்கள் முடிவு செய்தனர். அப்பொழுது சென்னையில் இருந்த பணக்காரர்கள் விலை அதிகம் என்று யாரும் வாங்கவில்லை. வட நாட்டிலும், தென்னாட்டிலும் வர்த்தகம் பெரிய அளவில் செய்து வந்த ராமகிருஷ்ணா டால்மியா என்பவர் வாங்கினார். ராம்னாத் கோயங்காவின் மகன் திரு.பகவான்தாஸ் கோயங்காவிற்கு தன் மகள் சரோஜினியைத் திருமணம் செய்து கொடுத்துச் சீதனமாக இந்த மதராஸ் கிளப்பை வாங்கிக் கொடுத்தார். கோயங்கா அவர்கள் எக்ஸ்பிரஸ் பேப்பருக்காக ஒரு புதிய கட்டிடம் கட்டிக்கொண்டார். அது நான்கு மாடி கொண்டதாகவும் எக்ஸ்பிரஸ், தினமணி, ஆந்திர பிரபா இவைகளுக்கு அச்சகம் ஆசிரியர் குழு நிர்வாகம் விளம்பரம் எல்லாவற்றிற்கும் தனித்தனியாக கட்டிக்கொண்டு மீதி இடங்களில் *P.M.G.* ஆபிஸ், *A.G.S.* ஆபீஸ், ஆரூரான் சுகர்ஸ், *T.U.C.S.* கிடங்கு இந்த ஸ்தாபனங்களுக்கு வாடகைக்கு விடப்பட்டு, மதறாஸ் கிளப் என்ற பெயரை எக்ஸ்பிரஸ் எஸ்டேட் என்றும், கிளப் ஹவுஸ் ரோடு என்ற பெயரை எக்ஸ்பிரஸ் எஸ்டேட் கிளப் ஹவுஸ் ரோடு என்றும் மாற்றினார் திருராம்னாத் கோயங்கா அவர்கள். இந்த எக்ஸ்பிராஸ் காரியாலயத்தில் அன்னபூர்ணா என்ற மாதர் சங்கத்தைச் சேர்ந்தவர்கள் ஜனதா கேண்டீன் நடத்தினார்கள். அவர்களால் தொழிலாளர்களைத் திருப்திப்படுத்த முடியாத தால் அவர்கள் காண்டீனை மூடிவிட்டார்கள்.

எக்ஸ்பிரஸ் உதவி மானேஜர் திரு.கா.ராமசாமி அவர்கள் என் சகோதரரைக் கூப்பிட்டு கேண்டீன் நடத்துமாறு அன்புக்கட்டளை இட்டார். கேண்டீனுக்கு வேண்டிய டேபிள் சேர், மின் விசிறிகள், லைட், சமையலுக்குப் பாத்திரங்கள் எல்லாம் இருக்கிறது. மளிகை சாமான்கள் வாங்கிப் போட்டு ஆள்களை வைத்து நீயே நடத்து. லாபம், நஷ்டம் எது வந்தாலும் உனக்குத்தான் என்று அடித்துச் சொல்லி விட்டதின் பயனாக ஒரே சமயத்தில் சுகுண விலாச சபா கேண்டீனும் எக்ஸ்பிரஸ் கேண்டீனும் சேர்ந்து வந்ததால் என் சகோதரர்கூட வேலை செய்துகொண்டிருந்த கண்ணன் என்பவர் சகோதரருக்கு நெருங்கிய நண்பனாக இருந்தபடியால் அவரையும் சேர்த்து இரு கேண்டீனையும் நடத்தினோம். சுதந்திரம் வந்து முதல் பொது தேர்தல் நடந்த சமயம். நானும் சகோதரரும், கண்ணனும், கேண்டீன் திறந்துவிட்டோம். மூவரும் சேர்ந்ததாலோ என்னவோ *S.V.S.* கேண்டீன் ஒரு வருடம்தான் நடந்தது. அந்த சுகுண விலாச சபா கேண்டீனும் (கண்ணன்) சகோதரரின் நண்பர் எங்களைப் பிரித்துவிட்டார். எங்களுடைய மூன்று பேர் கூட்டு நானும் என் சகோதரர் மட்டும்தான். நான் சகோதரரும் 10 வருட காலம் எக்ஸ்பிரஸ் காரியாலயத்தில் 3 கேண்டீன்கள் அதாவது *P.M.G.* ஆபிஸுக்கு ஒன்று, *A.G.S.* ஆபிஸுக்கு ஒன்று எக்ஸ்பிரஸுக்கு ஒன்று. இந்த மூன்றிலும் முதல் இடம் வகிப்பது எங்களுடையதுதான். நான் ஒரு மாதம் விடுமுறைக்குப் பிறகு வேலையை ராஜினாமா செய்தேன். திரு. வாசன் அவர்களைச் சந்தித்து காலில் சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தேன். சொந்தத் தொழில் செய்யப் போவதாக கூறினேன். அவர் மனப்பூர்வமாக சம்மதித்தார். ஆசீர்வதித்தார். அந்த இரண்டு காண்டீன் களுக்கும் அரசாங்கம் மான்யம் கொடுக்கும். அந்த மான்யத்திற்காக கேண்டீன் என்று பெயருக்கு நடத்தி வந்தார்கள்.

எங்கள் கேண்டீனில்தான் சுவையாக இருக்கும் என்பதும், தனியார் நடத்துவதாலும் எங்களுக்கு நல்ல பெயர். பாராளுமன்றத்தில் உதவி சபாநாயகராக இருந்த *G* . லஷ்மண் *(G.L.)* என்பவர் *P.M.G.* ஆபீஸில், *D.L.O.* ஆபீஸில் இருந்தார். *D.L.O.* என்றால் *(Delay Letter Office)* இங்கு ஆபீஸில் *G.L.* அவர்கள் அட்டண்டன்ஸ் ரிஜிஸ்டரில் கையெழுத்து மட்டும் போடுவார். பாக்கி நேரம் பூராவும் தொழில் சங்கத்திற்குத்தான் அதிக நேரம் எடுத்துக்கொள்வார். எப்படியோ அவர் அரசியல் கலப்பில்லாமல் தொழில் சங்கவாதியாக இருந்து தி.மு.க.வில் சேர்ந்து பின் இ.காங்கிரஸில் இறுதி வரை இருந்தார். நல்ல பண்பாளர். பிறருக்கு உதவி செய்வதில் சளைக்காதவர். இவர் என் கேண்டீனில் மாதக்கணக்கு வைத் திருந்தார். பின் அரசியலிலிருந்து ஓய்வு எடுத்துக் கொண்டார்.

இப்படித்தான் என் கைரேகையைப் பார்த்து உதவி டைரக்டர் திரு. விஜயராவ் சொன்ன கைரேகை ஜோஸ்யம் என் சகோதரர் திரு.*A.N.* சீனிவாசனால் பலித்து நானும் என் சகோதரனும் இந்தியன் எக்ஸ்பிரஸ் கேண்டீன் முதலாளி ஆனோம். இந்தியன் எக்ஸ்பிரஸ் தினமணி ஆபீஸில் கேண்டீன் நடத்தி வரும்பொழுதுதான் சுதந்திர போராட்ட வீரர்களும், தியாகிகளும் ஆசிரியர் குழுவில் இருந்த காலம். உண்மையான ஜனநாயக மக்களாட்சி நடந்து வந்தது. திரு காமராஜ், ராஜாஜி, குமாரசாமி ராஜா, பக்தவத்சலம், ஓமந்தூர் ராமசாமி ரெட்டியார் இவர்கள் ஆண்ட காலம்தான் பொற்காலம் என்று சொல்லும்படி இருந்ததை அன்றைய மக்கள் அறிவார்கள். இன்றைய இளைய தலைமுறையினர் அறியார். ஏனென்றால் அவர்கள் சுய விளம்பரத்திற்காகவோ ஏன் கட்சியின் விளம்பரத்திற்காகக்கூட எதையும் செய்தார்கள் இல்லை. அவர்கள் எது செய்தாலும் மக்கள் நலத்திற்காகத் தான். திரு.*A.G.* வெங்கடாச்சாரி, திரு.*A.N.* சிவராமன், *N.* ராமரத்தினம், சி.சு. செல்லப்பா இவர்கள் எல்லாரும் சுதந்திர

போராட்ட தியாகிகள். சி.சு. செல்லப்பா, *A.N.* சிவராமன் இந்த இருவர்களை தவிர மற்றவர்கள் அனைவரும் என் கேண்டீனுக்கு டிபன் சாப்பிட வருவார்கள். கேண்டீன் காலை 8 மணிக்கு திறந்து மாலை ஐந்தரை மணி வரை நடக்கும். பிறகு இரவு 9 மணிக்கு ஆசிரியர்கள், அச்சக ஊழியர்களுக்கும் காபியும், டீயும், ஏதாவது (நொறுக்கு தீனியும்) காராசேவ், ஓமப்பொடி, ரிப்பன் பகோடா இவைகளில் ஏதாவது ஒன்றும் அவர்கள் வேலை செய்யும் இடங்களுக்கு அருகில் கொண்டுபோய் கொடுக்கவேண்டும். இதற்கு உடனுக்குடன் காசு கொடுப்பவர்களும் உண்டு, கணக்கு வைப்பவர்களும் உண்டு. கடன் கொடுப்பதும், மறுப்பதும் எங்கள் இஷ்டம். அதில் ஆபீஸ் நிர்வாகம் தலையிடாது.

இந்த காரங்களைப் பொட்டலமாக கட்டிவிடுவோம். இன்றைய அளவுப்படி 50 கிராம் கொண்ட ஓமப்பொடியோ வேறு ஏதாவதோ 10 பைசாதான். காபி கப் 15 பைசா, டீ 12 பைசா (9 மணிக்கு முதல் முறையும் இரவு 11 மணிக்கு 2வது முறை கொடுக்கவேண்டும்.) இந்த இரண்டாவது முறைக்கு சிலருக்குப் பசி எடுக்கும். அப்பொழுது உப்புமா அல்லது தோசை சுமார் 15 பேர்களுக்குக் கொண்டு போவோம். செய்தி ஆசிரியர், பிரதம ஆசிரியர்கள் இருவரும் இரவு 10 மணிக்கு வீட்டுக்கு சென்றுவிடுவார்கள். மற்ற உதவி ஆசிரியர்கள் திரு.*N.* ராமத்தினம் *V.S.* நாராயணன் (பி.ஸ்ரீ.-என்ற தமிழ் அறிஞரின்) மகன் மற்றும் வ.உ.சிதம்பரனாரின் மகன் வ.உ.சி.சுப்பிரமணியம் இவர்கள் எல்லாம் இரவு டிபன் சாப்பிடுவார்கள். இரவு 2 மணி வரை வரும் செய்திகளை வெளியிடுவார்கள். 2 மணிக்குமேல் சிலர் ஆபிஸ் வண்டியில் வீட்டுக்குப் போய்விடுவார்கள். சிலர் இரவு அங்கேயே படுத்துத் தூங்கி காலையில் செல்வர். அப்படி செல்லும் ஆசிரியர்கள் எல்லாரும் காலை 10 மணிக்குள் காரியாலயம் வந்து விடுவார்கள். எக்ஸ்பிரசுக்கும் தினமணிக்கும் சற்று

இடைவேளை தருகிறேன். சற்று நேரம் இளைப்பாற போயஸ் கார்டனுக்கோ அல்லது தொல்காப்பிய பூங்காவிற்கோ செல்லட்டும்.

★ ★ ★

*A.G.S.* ஆபீஸில் வேலை பார்த்துக்கொண்டிருந்த திரு.*K.* பாலசந்தர் அவர்கள் இன்றைய இயக்குனர், கதை வசனகர்த்தா ராகினி கிரியேஷன்ஸ் என்ற நாடகக்குழு வைத்திருந்தார். அவரே நாடகம் கதை வசனம் டைரக்ஷன் எல்லாம் செய்து வந்தார். அந்த நாடகக்குழுவிற்கு (ரிஹர்சல்) ஒத்திகை என் கேண்டீனில்தான். மாலை ஆபீஸ் நேரம் முடிந்ததும் அவர்கள் சுமார் 12 பேர்களுக்குக் குறையாமல் வருவார்கள். அவர்களால் என் கேண்டினுக்கு 25 ரூபாய் டிபன் வியாபாரம் நடக்கும். என் சகோதரர் கேண்டீன் தனிக்கட்டிடத்தில் மாடியில் இருந்தது. ஒரு பக்கத்தில் பாலசந்தர் நாடகம் ரிஹல்சல் நடக்கும் மாலையில் ஐந்தரை மணியுடன் கேண்டீன் முடிவடைந்து விடுவதால் அவர்கள் பல நாடகங்கள் ஒத்திகை நடத்தி இருக்கிறார்கள். இவ்வாறு *K.* பாலசந்தர் வேலையை ராஜினாமா செய்யும்வரை நடத்தி இருக்கிறார். சினிமாவில் பிசியானதும் வேலையை ராஜினாமா செய்துவிட்டார்.

அப்பொழுது பிரபலமாகாத திரு. நாகேஷ், மேஜர் சுந்தர்ராஜன், கோகுல்நாத், வாத்தியார் ராமன், கோவிந்த ராஜன், ஜெயராமன் இன்னும் பலர் இவர்கள் எல்லாரும் என் கேண்டீனில் டிபன், காபி சாப்பிட்டவர்கள். அதன்பிறகு பாலசந்தர் அவர்கள் நாடகம் ஒன்று சினிமாவாக எடுக்கப் பட்டு வெற்றி அடைந்தது. பாலசந்தருக்கு வசனம் எழுத சினிமாவில் முதன்முதலாக வாய்ப்பு கொடுத்தது திரு.*R.M.* வீரப்பன் அவர்கள்தான். பின்னர் *A.G.S.* ஆபீஸ் வேலையை ராஜினாமா செய்துவிட்டு முழு நேர படத் தயாரிப்பாளர்

டைரக்டர் எனப் பிரபலமாகிவிட்டார். ராகினி கிரியேஷன்ஸ் கலா கேந்திராவாக மாறியது.

இச்சமயம் ஒரு நாள் மாலை 6 மணிக்கு திரு.C.N. அண்ணாத்துரை அவர்களையும், கம்யூனிஸ்ட் தலைவர் திரு.P. ராமமூர்த்தி, அவர்களையும் போஸ்டாபீஸ் தொழிலாளர்களின் சங்கத்தில் தலைவராக இருந்த G.L. என்னும் G. லஷ்மணன் அவர்கள், எக்ஸ்பிரஸ் எஸ்டேட் வளாகத்தில் இரு தலைவர்களையும் பேச வைத்தார். இருவரும் தொழிலாளர்களின் கோரிக்கைபற்றியும் வழக்கம்போல் மத்திய அரசாங்கத்தையும் காங்கிரஸையும் தாக்கிப் பேசினார்கள்.

அன்று நான் அவர்கள் பேச்சைக் கேட்க முடியாமல் போய்விட்டது. ஏனெனில் என் திருமணத்திற்காக நான் பெண் பார்க்கும் நிகழ்ச்சிக்குச் செல்லும்படி ஆகிவிட்டது. மறுநாள் அவர்கள் பேச்சை கேட்டவர்கள் மூலம் தெரிந்து கொண்டேன். அன்று அண்ணாத்துரை அவர்களின் பேச்சு ஒரு கேள்வியை காங்கிரசால் எழுப்பி பலவித விமர்சனங்களுக்குள்ளாக்கப்பட்டது. அண்ணாத் துரை பேசினார். தொழிலாளர்கள் ஸ்ட்ரைக்கைக் கடைசி ஆயுதமாகப் பயன் படுத்துங்கள் என்றும் அதற்குமுன் வேறு வழிகளில் உதாரணமாக ஒரு சட்டை அணியாமல் போராடலாம் என்றும் கூறினார் அண்ணாத்துரை. அப்படியானால் அங்கு வேலை செய்யும் பெண்களுக்கும் அதே தானா என்று காங்கிரசைச் சேர்ந்த சின்ன அண்ணாமலை கேட்டார் .

பின்னர் இந்த தொழில் சங்க G.லஷ்மணன் அவர்கள் தி.மு.க.வில் சேர்ந்து விட்டார். தன் உத்யோகத்தை ராஜினாமா செய்துவிட்டார். பின்னாளில் உதவி சபா நாயகராக பதவியும் வகித்து பின் என்ன காரணமோ இந்திரா காங்கிரஸில் சேர்ந்துவிட்டார்.

  

*A.G.S.* ஆபீஸிலிருந்து மீண்டும் ஜெமினி ஸ்டூடியோவிற்கு உங்களை அழைக்கிறேன்.

ஜெமினி ஸ்டூடியோ கேண்டீனில் மிக பிசியான நேரம் பகல் 1 மணிக்கு, டிபன் டைம் தவிர ஷூட்டிங் சம்பந்தப்பட்ட நேரத்தில் சாப்பிடும் நேரம் இரண்டுமாகச் சேர்த்து, டைனிங் ஹால் முழுவதும் கூட்டம். அப்பொழுது ஒரு இளைஞர் சுமார் 25 வயது இருக்கும் பேண்ட் ஷர்ட் அணிந்திருந்தார். ஹாலில் பரிமாறிக்கொண்டிருந்த என்னிடம் வந்து சார் குடிக்கத் தண்ணீர் வேண்டும் எனக்கேட்டார். நான் ஒரு டம்ளர் தண்ணீரைக் கொடுத்துவிட்டு என் வேலையைப் பார்க்க போய் விட்டேன். சற்று நேரத்தில் மெஸ்ஸுக்கு வரும் வழியில் ஒரே கூட்டமாக இருந்தது. மெஸ்ஸுக்கு வருபவர்களும் போகிறவர்களும் சந்தித்துக் கொள்ளக் கூடிய ஒரு இடம் அது. அங்கே என்னிடம் தண்ணீர் வாங்கி குடித்த வாலிபர் மயங்கிய நிலையில் கீழே கிடந்தார். அந்த இடத்திற்கு எதிரே ஒரு ரூம். அதில் டெக்னிஷியன்கள் சாப்பிட்டதும் சற்று நேரம் ஓய்வு எடுத்துக்கொள்வார்கள். அங்கே ஓய்வில் இருந்த காமிராமேன் தம்பு உதவியாளர் பாலகிருஷ்ணன் இன்னும் சிலர் வாலிபர் விழுவதைப் பார்த்துவிட்டு ஓடிவந்து புரோகிராம் ஆபீஸில் இருந்த சுந்தரவரதனுக்குச் சொன்னார்கள். அவரும் பார்த்துவிட்டு ஸ்டூடியோ வேனில் வாலிபரை தூக்கிப்போட்டுக் கொண்டு ஆழ்வார் பேட்டையில் உள்ள சங்கரா கிளினிக், டாக்டர் ரங்காச்சாரி அவர்களின் சீடர் திரு.சங்கரன் அவர்களிடம் கொண்டு போனார்கள். அவர் உடனடியாக சிகிச்சை அளித்தார். சற்று நேரம் கழித்து மயக்கம் தெளிந்து பேச ஆரம்பித்தார் அந்த இளைஞர். தன்னுடைய சட்டை பாக்கெட்டிலிருந்து நான்காக மடிக்கப்பட்ட ஒரு கடிதத்தை எடுத்து புரோகிராம் ஆபீஸரிடம் கொடுத்தார். அதைப் பிரித்து

படித்த ஆபீசர் அதை டாக்டரிடம் கொடுத்தார். அதில் எழுதப்பட்டிருந்த வாசகங்கள்.

'சார் சினிமா சான்சுக்காக அலைந்து அலைந்து திரு.வாசன் அவர்களைச் சந்திக்க முயன்றேன். முடியவில்லை. சந்திக்க முடியாததால் இந்த முடிவிற்கு வந்தேன். என் சாவுக்கு காரணம் நான்தான். என் உடலை எனக்கு முதன் முதலில் சிறிய சான்ஸ் கொடுத்த மணிக்கொடி எழுத்தாளர் திரு.பி.எஸ். ராமையா அவர்களிடம் ஒப்படைத்துவிடும்படி கேட்டுக் கொள்கிறேன். இப்படிக்கு *J.P.* சந்திரபாபு என்று எழுதப்பட்டிருந்தது. இதைப்படித்த டாக்டர் போலீசுக்கு தகவல் தொலைபேசி மூலம் கொடுத்துவிட்டார்.

போலீசார் வந்து தற்கொலை முயற்சி வழக்கு பதிவு செய்துகொண்டு டாக்டர் ஜெமினி ஸ்டூடியோ புரோகிராம் ஆபிஸர் எல்லாரும் சந்திரபாபுவின் விலாசம் வாங்கி கொண்டு கோர்ட் சம்மன் வரும்போது வரவேண்டும் என்று சொல்லிவிட்டுப் போய்விட்டார்கள். சந்திரபாபு புரோகிராம் ஆபீசர், டாக்டர், காமிராமென் தம்பு எல்லோரிடமும் மன்னிப்பு கேட்டுக்கொண்டார். பின்னர் வழக்கு வந்தபோது மாஜிஸ்ட்ரேட் முன்பு சந்திரபாபு ஷேக்ஸ்பியரின் நாடக வசனம் ஒன்றை ஆங்கிலத்தில் பேசி நடித்துக் காண்பித்தார். இதைக்கண்டு ரசித்த மாஜிஸ்ரேட் அவர்கள் 'இவ்வளவு திறமை இருந்தும் உன் உயிரைச் சுலபமாக விட துணிந்து விட்டாயே. உனக்கு நல்ல நேரம் வரும். அது வரை காத்திரு உனக்கு நன்னடத்தை ஜாமீன் 1 வருடம் கொடுத்திருக்கிறேன். தினமும் போலீஸ் ஸ்டேஷனில் வந்து கையெழுத்துப் போடவேண்டும்' என்று அறிவுரை கூறி வழக்கிலிருந்து விடுவித்தார். இதைக் கேள்விப்பட்ட திரு. வாசன் அவர்கள் தயாரித்துக்கொண்டிருந்த மூன்று பிள்ளைகள் என்ற படத்தில் சந்திரபாபுவிற்கு ஒரு சிறிய வேடம் கொடுத்தார். அதில்

சந்திரபாபு கொஞ்சநேரம் வந்தாலும் மிகவும் நன்றாக அமைந்துவிட்டதால் படம் பார்த்தவர்களின் கவனத்தை கவர்ந்துவிட்ட சந்திரபாபுவிற்கு பல படங்களில் சான்ஸ் கிடைத்து குறுகிய காலகட்டத்தில் அவருடைய நடிப்பாற்றல் பட முதலாளிகளுக்கும், ரசிகர்களுக்கும் மிகமிக திருப்தியாக இருந்தது. தன் நடிப்பாற்றலைப் பல படங்களில் முத்திரை பதித்துவிட்டார்.

சினிமாவில் உள்ள சகல அழிவுக்கலைகளிலும் தன்னை ஈடுபடுத்திக் கொண்டு கடனாளியாகி சொந்தப்படம் *M.G.R.* -ஐ வைத்து எடுக்க முயற்சித்து தோல்வி அடைந்து தன் உயிரை மாய்த்துக்கொண்டார். நடிப்புடன் மட்டும் நின்றிருந்தால் இன்று நாகேஷுக்கு அடுத்தபடி அவர்தான். விதி வலிது என்பதை நிரூபித்து விட்டார்.

தமிழ் நாட்டின் மிகச் சிறந்த மற்றொரு ஹாஸ்ய நடிகர் ஒருவர் அவரைப்பற்றி எல்லாரும் சொல்வது சிரிக்கவும், சிந்திக்கவும் வைத்தவர் என்று. சிறந்த சீர்திருத்தவாதி. எல்லாக் கட்சிகளிலும் அவருக்கு நண்பர்கள் உண்டு. அவர்தான் கலைவாணர் *N.S.* கிருஷ்ணன். கிருஷ்ணன், மதுரம் ஜோடி இருவரும் நகைச்சுவை நட்சத்திரங்களாகப் பிரகாசித்தார்கள். *N.S.* கிருஷ்ணன் விதியின் கொடுமைக்கு ஆளாகி சிறைத்தண்டனை மூன்றரை வருடம் அனுபவித்து விட்டு லண்டனின் கருணை மனுவினால் விடுதலை ஆனார்.

இவர் சிறையிலிருந்தபொழுது இவர் பெயரில் உள்ள நாடக கம்பெனிக்கும் இவருடைய இல்லத்திற்கும் (மதுரம்; *NSK*) மானேஜர் மாதிரி சகல விதமான பொறுப்புகளை வகித்து வந்தவர் திரு.*S.V.* சகஸ்ரநாமம் என்ற குண சித்ர நடிகர். *N.S.K.* அவர்களின்கூடப் பிறந்த சகோதரர்போல் வீட்டையும் நாடக கம்பெனியையும் கவனித்து வந்தார். சிறையில் வழக்காடுவதற்காக சம்பாத்யத்தில் முக்கால் பங்குக்குமேல்

போய்விட்ட நிலையில் வழக்கு நடத்துகொண்டிருந்த சமயம் ஒரு நாள் ஜெமினி அதிபர் திரு.*S.S.* வாசன் அவர்கள் மதுரம் அவர்களையும் சகஸ்ரநாமத்தையும் சந்திக்க *N.S.K.* யின் வீட்டிற்கு வந்து விடுகிறார்.

மற்ற விவரங்களை திரு. *S.V.* சகஸ்ரநாமம் அவர்களே 'திரும்பிப் பார்க்கிறேன்' என்ற தன்னுடைய நாடக, சினிமா வாழ்க்கை அனுபவங்களை புத்தகத்தில் அவர் எழுதியதை அப்படியே கீழே தருகிறேன்.

என்.எஸ்.கே. வழக்கு வேலைகளும் நடந்து வரலாயின. வ.ரா. அவர்கள் வழக்கம்போல் எங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் காட்டி வந்தார்கள். வி.டி. ரங்கசாமி அய்யங்கார் அவர்களின் பேருழைப்பாலும் எங்களது நண்பர்களின் ஆதரவாலும் என்.எஸ்.கே. அவர்கள் சீக்கிரம் எங்களுடன் வந்து சேர்ந்து விடுவார் என்ற நம்பிக்கை பலமடைய ஆரம்பித்தது. நம்பினோர் கெடுவதில்லை இது நான்கு மறைத் தீர்ப்பு என்ற பாரதியார் வாக்கு பழுதுபடாது என்று எண்ணி செயல்பட்டுக் கொண்டிருந்தோம். என்.எஸ்.கே. அவர்கள் விடுதலை பெற்றால் அவரது சொந்தக்காரில் வரவேண்டு மென்ற முடிவில் அருணாசலம் செட்டியார் உதவியால் புதிய கார் மாரிஸ் மைனர் ஒன்று வாங்கினோம். ஏப்ரல் மாதம் 23ந்தேதி நான் காலையில் எதிரேயுள்ள டென்னிஸ் விளையாட்டுக் களத்தில் விளையாடிக் கொண்டிருந்தேன். அது சமயம் எதிரில் விளையாடிக் கொண்டிருந்த ஆட்டக்காரன் வேகமாக அடித்த பந்தை தடுப்பதற்காக டென்னீஸ் வலைப்பக்கம் முன்னதாக ஓடிவந்து தடுத்தேன். அந்தப் பந்து என் நெற்றியில் பட்டு என் கண்ணைப் பதம்பார்த்துவிட்டது. கண்ணெல்லாம் கலங்கி சிவப்பாக மாறி விழிக்க முடியாமல் நேரே கண் டாக்டரிடம் போய் கண்ணை சுத்தம் செய்து மருந்து போட்டு அடிபட்ட வலது கண்ணுக்கு ஒரு பக்கம் மறைவு கட்டிவிட்டார்கள்.

போய்விட்ட நிலையில் வழக்கு நடத்துகொண்டிருந்த சமயம் ஒரு நாள் ஜெமினி அதிபர் திரு.*S.S.* வாசன் அவர்கள் மதுரம் அவர்களையும் சகஸ்ரநாமத்தையும் சந்திக்க *N.S.K.* யின் வீட்டிற்கு வந்து விடுகிறார்.

மற்ற விவரங்களை திரு. *S.V.* சகஸ்ரநாமம் அவர்களே 'திரும்பிப் பார்க்கிறேன்' என்ற தன்னுடைய நாடக, சினிமா வாழ்க்கை அனுபவங்களை புத்தகத்தில் அவர் எழுதியதை அப்படியே கீழே தருகிறேன்.

என்.எஸ்.கே. வழக்கு வேலைகளும் நடந்து வரலாயின. வ.ரா. அவர்கள் வழக்கம்போல் எங்களுக்கு ஊக்கமும் உற்சாகமும் காட்டி வந்தார்கள். வி.டி. ரங்கசாமி அய்யங்கார் அவர்களின் பேருழைப்பாலும் எங்களது நண்பர்களின் ஆதரவாலும் என்.எஸ்.கே. அவர்கள் சீக்கிரம் எங்களுடன் வந்து சேர்ந்து விடுவார் என்ற நம்பிக்கை பலமடைய ஆரம்பித்தது. நம்பினோர் கெடுவதில்லை இது நான்கு மறைத் தீர்ப்பு என்ற பாரதியார் வாக்கு பழுதுபடாது என்று எண்ணி செயல்பட்டுக் கொண்டிருந்தோம். என்.எஸ்.கே. அவர்கள் விடுதலை பெற்றால் அவரது சொந்தக்காரில் வரவேண்டு மென்ற முடிவில் அருணாசலம் செட்டியார் உதவியால் புதிய கார் மாரிஸ் மைனர் ஒன்று வாங்கினோம். ஏப்ரல் மாதம் 23ந்தேதி நான் காலையில் எதிரேயுள்ள டென்னிஸ் விளையாட்டுக் களத்தில் விளையாடிக் கொண்டிருந்தேன். அது சமயம் எதிரில் விளையாடிக் கொண்டிருந்த ஆட்டக்காரன் வேகமாக அடித்த பந்தை தடுப்பதற்காக டென்னீஸ் வலைப்பக்கம் முன்னதாக ஓடிவந்து தடுத்தேன். அந்தப் பந்து என் நெற்றியில் பட்டு என் கண்ணைப் பதம்பார்த்துவிட்டது. கண்ணெல்லாம் கலங்கி சிவப்பாக மாறி விழிக்க முடியாமல் நேரே கண் டாக்டரிடம் போய் கண்ணை சுத்தம் செய்து மருந்து போட்டு அடிபட்ட வலது கண்ணுக்கு ஒரு பக்கம் மறைவு கட்டிவிட்டார்கள்.

கண் கட்டுடன் இருந்த என்னை என்.எஸ்.கே. விசாரித்தார். பந்தால் அடிபட்ட விஷயத்தைச் சொன்னேன். கோர்ட்டிலிருந்து ப்ரீவி கௌன்சல் உத்தரவுடன் அதிகாரிகள் காவலர்கள் வந்து சிறைக்காப்பாளர்களிடம் கொடுத்தார்கள். வழக்கறிஞர் வி.டி. ரங்கசாமி அய்யங்கார் அவர்களும் உடன் வந்து என்.எஸ்.கேயைக் கட்டித் தழுவிக்கொண்டார். எல்லாவிதமான சட்டதிட்டங்களும் முன்கூட்டியே சிறைக்காப்பாளர் தயாராக வைத்திருந்ததால் என்.எஸ்.கே. அவர்களை நான் ஓட்டி வந்த புது மாரீஸ் மைனர் காரில் ஏற்றி மாம்பலம் வீட்டுக்கு வந்து சேர்ந்தோம். அவர் சிறை வாசம் செய்த சமயம் நாடகக் குழுவில் ஏற்பட்ட நெருக்கடிகள் பற்றியும் அந்த சமயத்தில் முன் வந்து உதவி செய்த பெரியவர்கள் பற்றியும் தெரிவித்தோம். முக்கியமாக சிறைவாசம் எனத் தீர்ப்புக் கேட்டதும் எஸ்.எஸ். வாசன் அவர்கள் அதிர்ச்சியடைந்ததையும் போன் மூலம் ஆறுதல் சொன்னதோடு நாளை காலை நேரில் வந்து பார்க்கிறேனென்று சொன்னார். அதன்படியே மறுநாள் காலை 8 மணிக்கு வரவேற்பறையில் 10 நிமிஷம் உட்கார்ந்திருந்தேன். என்.எஸ்.கே. அவர்கள் வழக்கைப் பற்றி ஆரம்பத்திலிருந்தே படித்துவந்ததோடு ஜட்ஜ்மெண்ட்டை வாசித்ததையும் தீர்ப்பு அக்ரமமாகக் கொடுக்கப்பட்டதையும் பேசிக்கொண்டிருந்து விட்டு கடைசியாக ஒரு பொட்டலத்தை எடுத்து நடுவில் போட்டிருந்த டீ பாயின்மேல் வைத்துவிட்டு இதில் என்னால் இப்போது கொடுக்க இயன்ற ஒரு தொகையை வைத்திருக்கிறேன். நீங்கள் தெய்வத்தை நம்பி காரியம் செய்து வாருங்கள் எல்லாம் நல்லபடியாகவே முடியும் எனக் கூறினார்.

அது சமயம் டி.ஏ.எம். அவர்கள் கண்ணீருடன் கலங்கிய நிலையில் நீங்கள் செய்யும் இந்த உதவிக்கு நான் எந்த வகையில் இதை எல்லாம் திருப்பிக் கொடுக்கப் போகிறேன். எனக்கு உங்கள் படங்களில் ஏதாவது தொழில் கொடுத்து

இதையெல்லாம் திருப்பிக்கொடுக்க ஏற்பாடு செய்ய கேட்டதும், வாசன் அவர்கள் உறுதியான மனதுடன் அதெல்லாம் நீங்கள் தனியாக திரைப்படங்களில் நடிக்கக் கூடிய நிலை வராது. என்.எஸ்.கே. விடுதலையாகி நீங்கள் தம்பதிகளாக என் படத்தில் நடிப்பீர்கள் என்று ஆறுதல் கூறினார் என்று விளக்கமாய் சொன்னதும் என்.எஸ்.கே. கண்களும் கலங்கியது. நேரே வாசன் அவர்களை அவர்களது இல்லத்திற்குப் போய் சந்தித்து அவருக்கு நன்றி தெரிவித்தார்கள்.

அவர் கொடுத்த காகித பொட்டலத்தைப் பிரித்துப் பார்த்த தில் ரூ.25,000 இருந்தது என்று சொன்னால் அவரது பெருந்தன்மையையும் அவர் உண்மையான கலை மேதையாக என்.எஸ்.கே. அவர்களை பார்த்த பார்வையும் உங்களுக்குப் புரியும். (நியூ செஞ்சுரி புக்ஸ்) மேலே கண்ட வரிகள் S.V. சகஸ்ரநாமம் எழுதி வெளியிட்ட ''திரும்பிப் பார்க்கிறேன்'' என்ற புத்தகத்தில் 185, 186, 187, 188 பக்கங்களில் எழுதியிருப்பவை.

என்.எஸ்.கே. தம்பதிகள் சந்திரலேகா படத்தில் மட்டுமே தம்பதிகளாக நடித்தார்கள். அதன்பிறகு அவர்கள் ஜெமினி படத்தில் நடிக்கவே இல்லை. ஏன்? எப்படி? இதற்கான விடை. சிந்தனைச் சிகரம் திரு. ஜெயகாந்தன் அவர்கள் தமிழ்மொழிக்கும் மிகச்சிறந்த இலக்கியவாதிகளுக்கும் தமிழ் வாசக ரசிகர்களுக்கும் ஓர் சொற்றொடர் தந்திருக்கிறார். அதுதான் 'சில நேரங்களில் சில மனிதர்கள்'.

இந்த சில மனிதர்களில் ஒருவராக மாறிப் போனார். கனமான புகழ்வாய்த்த என்.எஸ்.கே. அவர்கள். ஜெமினியின் சிறந்த படங்களில் ஒன்றான மிஸ். மாலினி ஆங்கில எழுத்தாளர் மறைந்த திரு. R.K. நாராயணனின் கதையைத் தழுவி எடுக்கப்பட்ட படம். காமிரா மேதை K. ராம்னாத் ஆர்ட்

டைரக்டர் *A.K.* சேகர் திரு கொத்தமங்கலம் சுப்பு அவர்கள் மிக அருமையாக மிஸ்டர். சம்பத் என்ற பாத்திரத்தில் நடித்திருந்தார் -

அந்த மிஸ். மாலினி என்ற படத்துடன் சுமார் ஆயிரம் அடிக்கு பிரபல கார்ட்டூனிஸ்ட் திரு. தாணு தலைமையில் கார்ட்டூன் டிபார்ட் மெண்டில் 50 அல்லது 60 பேர்களுக்குக் குறையாமல் வேலை செய்து வந்தார்கள். அப்பொழுது பிரபலமாக இருந்த நடிகர்கள் *P.U.* சின்னப்பா, *T.S.* பாலையா இருவரும் வசனம் பேசி கத்திச்சண்டை போடுவது போலவும் *P.* கண்ணாம்பா மற்றும் ம. நாராயணராவ், ரஞ்சன் இவர்களும் ஒவ்வொரு காட்சியிலும் வருகிறார்கள். இந்த சமயத்தில்தான் *M.K.T.* பாகவதர், *N.S.K.* யும் சிறையிலிருந்து விடுதலை ஆனார்கள். இவர்கள் இருவர்களையும் இக்கார்ட்டூன் படத்தில் சேர்க்க வாசன் விரும்பி இருவரையும் அழைத்து எடுத்த வரை கார்ட்டூனைப் போட்டு காண்பித்தார்கள். இருவர்களும் இந்தியாவிலேயே முதன் முதலில் கார்ட்டூன் படம் எடுத்தது இதுதான் என்று மிகவும் பாராட்டினார்கள். எங்கள் வேலை இதில் என்ன என்று கேட்டார். அதற்கு தாணு சிறிய ஸ்கெச் போட்டு காண்பித்தார்.

முதலில் ஒரு ரோஜாப்பூ திரையில் தோன்றும் அடுத்த படியாக *N.S.K.* தோன்றி தன் இரு கைகளையும் ரோஜாவை நோக்கி எதையோ எடுப்பது போலவும் நீட்டுவார். அதிலிருந்து பாகவதரின் அழகான முகம் தோன்றும். இதைக் கண்டதும் என்.எஸ்.கே. ஐய்யோடா சேட்டா என்று சந்தோஷம் பொங்கக் கூறுவார். இந்த ஐய்யோடா சேட்டா என்ற வசனம் ஆர்யமாலா என்ற படத்தில் என்.எஸ்.கே. அடிக்கடி கூறுவார். இந்த காட்சி படமாக்கப்பட்டு என்.எஸ்.கே. அவர்களே அந்த வசனத்தைப் பேசினார். ஒலிப்பதிவு செய்யப்பட்டு மிஸ். மாலினி படம் காட்டுவதற்கு

முன் இந்த ஆயிரம் அடிக் கார்ட்டூன் படத்தைக் காண்பிக்க வேண்டும் என்று ஏற்பாடு செய்யப்பட்டிருந்த வேளையில் ஒரு நாள் என்.எஸ்.கே. அவர்களிடமிருந்து ஒரு வக்கீல் நோட்டீஸ் வந்தது. திரு.வாசன் அவர்களுக்கு அதில் என்.எஸ்.கே. டப்பிங் குரல் கொடுத்த கார்ட்டூன் காட்சியை காட்டக் கூடாது என்றும், அப்படிக் காட்டப்படுமானால் சட்டப்படி தங்கள்மீது நடவடிக்கை எடுக்கவேண்டியிருக்கும் எனவும் எச்சரிக்கப்பட்டிருந்தது.

இதை படித்த வாசன் அவர்கள் அப்பொழுது அங்கே இருந்தவர்களிடம் அதாவது ஜெமினி கதை இலாகா கொத்தமங்கலம் சுப்பு, *K.T.* மகாதேவன் கி.ரா., வேப்பத்தூர் கிட்டு, திண்டுக்கல் நாயினா, சங்கு சுப்ரமணியம் ஆகியோர் எவ்விதமான கருத்தும் கூறவில்லை. எடிட்டிங் சந்துரு என்பவரைக் கூப்பிட்டு அந்த கார்ட்டூன் காட்சிகளில் இருந்த பாகவதர் என்.எஸ்.கே., *P.U.* சின்னப்பா, *T.S.* பாலய்யா இவர்கள் சம்பந்தப்பட்ட காட்சிகளை வெட்டிவிட்டு *P.* கண்ணாம்பா, வசுந்தராதேவி, *L.* நாராயணராவ், சுந்தரி பாய், ரஞ்சன் ஆகியோர் காட்சிகள் மட்டும் இந்த கார்ட்டூன் படத்தை போடுங்கள் போதும் என்று அனுப்பிவிட்டார்.

திரு.என்.எஸ்.கே. ஏன் அப்படி செய்தார்? இதற்கு விடை ஜே.கே.யின் 'சில நேரங்களில் சில மனிதர்கள்'தான்.

என்.எஸ்.கே. சிறையிலிருக்கும்போது *S.V.S.* ம் மதுரம் அவர்களும் நடத்தி வந்த பைத்தியக்காரன் என்ற நாடகத்தை சினிமாவாக தயாரித்து வந்தார்கள். அதற்கு பெரிதாக செலவுகள் இல்லை எனினும் சிலரிடம் கடன் வாங்கப்பட்டிருந்தது. அந்த சமயம் ஆகஸ்ட் 15-ம் தேதி சுதந்திரதினத்தன்று படம் வெளியிட முடிவு செய்து என்.எஸ்.கே.யும் மதுரமும் நடிப்பதற்கு உண்டான சில மாற்றங்கள் செய்து படப்பிடிப்பும் முடிந்தது. ஆகஸ்ட் 15

சுதந்திர தினத்தில் தன்னுடைய படமான ''மிஸ். மாலினி''யையும் வெளியிட முன்பே ஏற்பாடு செய்திருந்தார் வாசன். சென்னை பிரபாத், ஸ்டார், கிரவுன், லக்ஷ்மி ஆகிய மூன்று தியேட்டர்களிலும் வெளியூர்களிலும் சேர்த்து ஒரே சமயத்தில் 40 ஊர்களில் ஜெமினியின் படங்கள் எல்லாமே வெளியிடுவதை முதன்முதலில் வாசன்தான் ஆரம்பித்து வைத்தவர்.

என்.எஸ்.கே. குழுவினர் ஒரு மோசமான விளம்பரம் செய்தார்கள். சுதந்திரக்கொடி எல்லோரும் சட்டையில் குத்தி கொள்வதற்காக சிறிய வடிவில் (உள்ள கொடியில் மூவர்ணக்கொடியில் நடுவில் (பைத்தியக்காரன்) என்ற வாசகம் எழுதி எல்லாருக்கும் N.S.K. பிலிம் சம்பந்தப்பட்டவர்களுக்கும் அங்கு வந்தவர்களுக்கும் கொடுத்தனர். இதைக் கண்டு முகம் சுளித்தவர்கள் அநேகம் பேர்கள். சுதந்திரதினம் பைத்தியக்காரத்தனமா? இந்த கொடியை சட்டையில் குத்திகொண்டு தங்களைப் பைத்தியக்காரன் என்று சொல்லிக் கொள்ள நாங்கள் தயாராக இல்லை என்று பலபேர் அதை குத்தி கொள்ளவே இல்லை.

மிஸ். மாலினி படமும், பைத்தியகாரன் படமும் ஒரே சமயத்தில் வெளிவந்தது. மிஸ். மாலினி வெற்றி. பைத்தியக்காரன் இரண்டரை ஆண்டுகள் இடைவெளிவிட்டு என்.எஸ்.கே., டி.ஏ.மதுரம் தம்பதிகள், S.V.S., M.G. ராமச்சந்திரன் ஆகியோர்கள் நடித்தும் படம் தோல்வியைத் தழுவியது. அந்தக்கால சட்டசபையில் ஒரு உறுப்பினர் மிஸ் மாலினி படத்தை பாராட்டி பேசினார். அவர் பேச்சை சட்டசபை அங்கீகரித்தது. அந்தப் படத்தில் அரசு ஊழியர்கள் லஞ்சம் வாங்குவதும், ரேஷன் கடைகளில் வாங்கும் பொருள்களில் உள்ள கலப்படங்களைப்பற்றி ஒரு அருமையான பாட்டு ஒன்றும் எல்லா தரப்பு மக்களிடையேயும்

பரவலாகப் பேசப்பட்டது. அது, இதுதான். நான்கு பெண்கள் கையில் குடத்தை எடுத்து கொண்டு தண்ணீர் எடுத்துச்செல்ல ஆற்றை நோக்கி வரும்போது அவர்கள் பாடுவதாக காட்சி அமைக்கப்பட்டிருந்தது.

ஒருபெண்: பருப்பு நல்ல உசத்தி பருப்பு 10 நாளா வேகுது. பார்த்து பார்த்து பொறுக்கினாலும் பல்லு உடைஞ்சு போகுது.

மற்றொருத்தி : சக்கரை கிடூவ்ல போய் சாஞ்சிகிட்டு நிக்கனும் சண்டைபோட்டு பத்து பலம் சாக்கடமண் வாங்கனும்.

மூன்றாமவர் : அம்மாவென்று ஜவுளிக்காரன் அழைத்த காலம் போச்சுது. நம்மை பார்த்து அந்தப் பயல் மல்லாந்திருக்கலாச்சுது.

இந்த பாடல் இப்போதும் பொருத்தமாக இருக்கிறது.

மிஸ். மாலினி படத்தில் *V.* சோராமன் என்று ஒரு நடிகர் நாடக டைரக்டராக நடித்தார். இவர் முதலில் நடித்தபடம் இதுதான். மற்றொரு இளைஞர் இவருக்கு உதவியாளராக நடித்தார். இவருக்கும் இதுதான் முதல் படம். இவர் பெயர் *R.* கணேஷ் என்பது. முதன்முதலில் இவர் புதுக்கோட்டையில் ஏதோ அரசு உத்யோகத்தில் இருந்தார். இவரை ஜெமினி கதை இலாகா வரவழைத்து, மேக்கப் டெஸ்ட் எல்லாம் நடத்தி கதாநாயகனுக்கு ஏற்றபடி இவர் இல்லை எனத் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது. அப்போது ஜெமினி ஸ்டுடியோவில் டைரக்டரும், புரொடக்ஷன் என்ற பெரிய பதவியில் இருந்தவருமான காமிரா மேதை *K.* ராம்நாத் அவர்கள் இவரை (*R.* கணேஷ்) திருப்பி புதுகோட்டைக்கு அனுப்பாமல் இவருக்கென்றே கேஸ்டிங் என்ற டிபார்ட்மெண்ட ஏற்படுத்தி தனியாக ரூம், ஒரு டைப்பிஸ்ட் ஒரு ஆபீஸ் பாய், எல்லாம் கொடுத்து இவருக்கு கேஸ்டிங் அஸிஸ்டண்ட் என்று பெயரும் கொடுத்து

மாதச் சம்பளத்தில் சேர்த்தார். இவருடைய வேலை என்னவென்றால், சினிமாவில் நடிக்க வேண்டும் என்று தீராத ஆசை கொண்டவர்கள் எழுதும் கடிதங்கள் அனுப்பும் போட்டோக்கள் எல்லாவற்றையும் அகர வரிசைப்படி வைத்திருக்கவேண்டும். நாளைக்கு ராஜ தர்பார் சீன் ஷூட்டிங் என்றால் இன்று காலை 10 மணிக்குள்,, 10 ராஜாக்கள், மந்திரி, சேனாதிபதி ராஜ தர்பாருக்கு வேண்டிய நடிகர்கள் வேண்டும் என்று இவரிடம் சொல்லிவிடுவார்கள் புரொடக்ஷன் ஆபீஸர். இவர் உடனே போட்டோக்களையும் விலாசத்தை யும் பார்த்து ஆள் அனுப்பி, அவர்களை அழைத்து வர ஏற்பாடு செய்ய வேண்டும். இதைத் தவிர கதாநாயகனில்லாத சிறு வேடங்களில் நடிக்கவேண்டும். பின்னர் இவர்தான் ஜெமினி கணேஷ் என்றும் காதல் மன்னன் என்றும் முப்பெரும் கதாநாயகர்களில் ஒருவராக உயர்ந்தார். M.G.R., சிவாஜி, ஜெமினி என்று திரையுலக மூவேந்தர்களானார்கள். அதிர்ஷ்டம், நல்லநேரம், பொல்லாத நேரம் இவைகள் எல்லாம் சினிமாவிற்கும் அரசியலுக்கும்தான் மிகப் பொருத்த மாக இருக்கிறது; என்றும் இருந்து வருகிறது.

மிஸ். மாலினியின் நாடக டைரக்டராக நடித்த V. சீதாராமன்தான் ஜாவர் சீதாராமன் ஆனார். பிரெஞ்சு நாவலாசிரியர் விக்டர். யூகோவின் லெஸ் மிசரபிள் என்ற நாவலை கலைஞர் சுத்தானந்த பாரதியார் அவர்கள் தமிழில் அருமையாக மொழி பெயர்த்திருந்தார் 'ஏழை படும்பாடு' என்று. அந்தக் கதையை படமாக எடுத்தார், இரு மேதைகளான ராம்நாத், A.K. சேகர். அதில் ஜாவர் என்ற போலீஸ் அதிகாரியாக மிக கச்சிதமாக வேஷப் பொருத்தமும், நடிப்பும் அமைந்து விட்டதால், அன்று முதல் ஜாவர் சீதாராமனாக மாறினார் V. சீதாராமன்.

## உழைப்பால் உயர்ந்த திருமணம்

மாப்பிள்ளை அழைப்பு எனப்படும் ஜானவாசம் ஊர்வலம் மைலாப்பூர் கபாலீஸ்வரர் கோயிலிலிருந்து மியூசிக் அகாடமி எதிரில் உள்ள ஜெமினி ஹவுஸ் வந்து சேருவதற்கு இரண்டரை மணி நேரம் பிடித்தது. ஊர்வலத்தில் வந்த கூட்டத்தை ஒழுங்குபடுத்த போலீஸார் வரவேண்டிதாயிற்று. ஊர்வலத்தில் நடந்து வந்த மாமனார் திரு.S.S.வாசன் அவர்களைப் பார்ப்பதற்காக பெரும்பாலும் பெண்களும் மாமிகளும் பெரியவர்களும் ஆர்வமுடன் காணப்பட்டார்கள்.

தன் ஒரே அன்பு மகள் திருமணத்திற்கென்றே வாங்கப் பட்டது ஜெமினி ஹவுஸ் என்ற பெரிய பங்களா. நான்கு நாட்கள் கல்யாணம் நடந்தது. அப்போதைய அரசியல் பிரமுகர்கள், பத்திரிகைப் பிரமுகர்கள், சினிமா உலகம், விகடன் ஏஜென்டுகள், வெளியூர், உள்ளூர் தியேட்டர் முதலாளிகள், சினிமா பட விநியோகஸ்தர்கள் இந்தியா முழுவதிலிருந்து வந்திருந்தார்கள். இவர்கள் தங்குவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் நன்கு செய்யப்பட்டது. வரதட்சிணை 1 லட்சம் ரூபாய்க்கான செக் வழங்கப்பட்டது. இது நாள் வரை குடும்பத்துடன் தங்கி இருந்த பங்களாவும் (சுதர்சன் என்ற பெயர்.) பெண் வீட்டுச் சீராக கொடுக்கப்பட்டது. மாப்பிள்ளை திரு.G.வெங்கட சுப்ரமணியம் என்ற மணமகனுக்கு கல்யாணம் வைதீக முறைப்படி நடந்ததை சினிமாவாகவே படம் எடுத்தார்கள். இந்தக் கல்யாண வைபோகத்திற்கு ஜெமினி ஸ்டூடியோ மெஸ் டிபார்ட்மெண்ட் தலைமை சமையல் கலைஞர் திரு.D.E.மகாதேவ அய்யர் பொறுப்பேற்று பிரமாதமாக எங்களையும், மெஸ் ஊழியர்கள் (தவிர கல்யாணம் நடக்கும் 4 நாட்களும்) வெளி ஆட்கள் சமையல் காரர்கம், உதவியாளர்களையும் 250 பேர்கள் அதிகமாக வேலைக்கு சேர்த்துக் கொண்டோம். இந்த 250 பேர்களுக்கும்

சம்பூ வேஷ்டியும் அங்கவஸ்திரமும் தவிர சம்பளமும் கொடுக்க ஏற்பாடு செய்தவர் எங்கள் (ஹெட்குக்) D.E.M. அவர்கள். இவர் போட்ட மெனுவை ஒரு மாற்றமும் செய்யா மல் அப்படியே ஒப்புதல் அளித்துவிட்டார், திரு.வாசன் அவர்கள். D.E.M. போட்ட மெனுவைப் பாருங்கள்.

முதல் நாள் காலையில் – ஒரு இனிப்பு + இட்லி, பொங்கல் கொத்சு சட்னி + மிளகாய் பொடி எண்ணை, பழங்கள்.

பகல் உணவு – ஒரு அவியல் இரண்டு பொரியல், ப்ரூட் பச்சடி, தயிர் பச்சடி, பருப்பு, நெய், சாம்பார், ரசம், மோர்க் குழம்பு, மோர், பாயசம், வடை, வறுவல், ஊறுகாய்.

ஜானவாசத்தன்று ஸ்பெஷல் தேங்காய் போளியும் நெய்யும் இலையில் பரிமாறுவார்கள்.

மாலை டிபன் – ஒரு இனிப்பு, ஒரு லைட் காரம் (லைட் என்றால் மிக்சர் உருளைகிழங்கு போண்டா, பஜ்ஜி), இவை மூன்றும் காபியும்.

இரவு விருந்து அப்பொழுதெல்லாம் விஜிடெபிள் பிரிஞ்சி, பூரி சென்னா, பிசிபேளா இவைகளெல்லாம் நடை முறைகளில் அதுவும் கல்யாணக் காலங்களில் பழக்கம் இல்லை. மோர் குழம்புக்குப் பதில் வத்தல் குழம்பும் பாயசம், இனிப்பு, காய்கறிகளும் ஒருமுறை வந்தது மறுபடி வராது. வேறு தினுசும் வேறு சுவையும் உள்ளதாகவே இருக்கும்.

இதை தவிர ஒரு ஸ்டாலில் காபி, ஐஸ் வாட்டர் காலை 6 மணி முதல் மாலை ஏழரை மணி வரை யார் கேட்டாலும் கொடுத்துக் கொண்டே இருப்பார்கள். அதேபோல் ஒரு ஸ்டாலில் கும்பகோணம் வெற்றிலை சீவல், புகையிலை, அசோகா பாக்கு பொட்டலம் எப்போதும் யார் கேட்டாலும் கொடுத்துக் கொண்டே இருப்பார்கள். கூட்ட நெரிசலைச் சமாளிக்க நான்கு குதிரையில் போலீசார்களும் தவிர 100 போலீசார்களும் இருந்தார்கள். ஒரு மைக் மூலம் வரும்

கார்களின் நம்பர்களை சொல்லி ஏதாவது தகவல் தந்து கொண்டே இருப்பார்கள். இந்த போலீசாருக்கும் டூடி மாறி போகிறவர்கள் வருகிறவர்கள் உள்பட தினசரி 200 போலீசாருக்கும் நான்கு நாள்களிலும் காலை முதல் இரவு வரை கல்யாண சாப்பாடுதான். இந்த கல்யாணத்திற்கு மூன்று இடங்களில் சாப்பாடு போடப்பட்டது. 1. ஜெமினி ஹவுஸ். 2. ஜெமினி ஸ்டூடியோ (நம்பர் 1) (மொத்தம் 4 ஸ்டூடியோவில் ஒரே சமயத்தில் படப்பிடிப்பு நடப்பதற்காக வசதிகள் உண்டு. இதில் 1 நம்பர் பெரியது) 3. செயின்ட் அப்பாஸ் என்ற பள்ளிகூடத்தில் வெளியூர்களிலிருந்து வந்தவர்களுக்காக போடப் பட்டது. ஆனால் மூன்று இடங்களிலும் ஒரே மாதிரியான சாப்பாடுதான்.

நான்கு அரசாங்க பஸ்கள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன. ஜெமினி ஹவுசில் கூட்ட நெரிசலைச் சமாளிப்பதற்காக இருந்த போலீசார்களை ஏற்றிக் கொண்டு ஸ்டூடியோவிற்கும், ஜெமினி ஹவுசுக்கும் சாப்பிடுவதற்காக அழைத்துப் போகவும், இன்னும் மற்றவர்களை அழைத்து வரவும் எல்லாக் காரியங்களுக்கும் இந்த பஸ்கள் உபயோகப்பட்டன. திருமணத்திற்கு அன்றைய சென்னை நகர பிரபலஸ்தர்கள் உயர் போலீஸ் அதிகாரிகள் அவ்வளவு அமைச்சர்களும் வந்தனர் (இப்போது உள்ளதுபோல் அமைச்சர் கூட்டம் அப்போது இல்லை. மொத்த அமைச்சர்களும் 10 க்குள் அடங்குவர்) தந்தை பெரியார் வந்து மணமக்களை வாழ்த்தி பரிசும் வழங்கினார். வாசன் அவர்கள் மணமக்களை அழைத்து வந்து, பெரியார் காலில் விழுந்து சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தார்கள். பெரியார் இருவர் தலைகளிலும் இரு கைகளை வைத்து ஆசி வழங்கினார். பரிசுப் பொருள்கள் வாங்கி கொடுத்தவர்களின் பெயரை எழுதி வைத்துக் கொள்வதற்காக ஜெமினி ஸ்டூடியோ சீப் அக்கௌண்டன்ட் A.R. ராமமூர்த்தி அவர்களும் இவருக்கு உதவியாக ராமகிருஷ்ணன் மற்றும்

ஹரிகிருஷ்ணன் இவர்களும் இருந்தார்கள். இந்த மூவரும் வங்கிகளில் பணம் வைத்திருக்கும் கூடு போன்ற அறை ஒன்று சுற்றிலும் கண்ணாடியால் சூழப்பட்டிருக்கும். பரிசு கொடுப்பவர் இந்த மூவரிடம்தான் கொடுக்க முடியும். இதற்கு எல்லா பிரபலங்களும் வரிசைப்படியே நின்றது அப்போது அதிசயமாகப் பேசப்பட்ட விஷயங்களில் ஒன்று. பிரபலமானவர்களின் 4 நாள் பாட்டுக் கச்சேரி. M.S.S., M.K.T., செம்மங்குடி, ராஜரத்தினம் பிள்ளை நாதஸ்வரம்.

இந்தக் கல்யாணக் கோலாகலங்கள் மங்களகரமாய் முடிந்து ஒருவாரம் சென்றது. மணமகள் புக்ககம் சென்றபின் ஜெமினி ஹவுசில் சுமார் 1 மாதம் வரை இரவு விருந்து கொடுத்தார் திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள். கல்யாணத்திற்கு வர முடியாமல் போனவர்கள், வந்தவர்களில் சரியாக கவனிக்கப் படாதவர்கள் இன்னும் பல முக்யஸ்தர்கள் இவர்களை எல்லாம் நாள் ஒன்றுக்கு 25 பேர்கள் வீதம் விருந்துக்கு அழைக்கப்பட்டு அவர்கள் சாப்பிட்டுச் சென்ற பின் வாசன் அவர்கள் சாப்பிடுவார். இவருக்கு விருந்து சாப்பாடு கிடையாது. ஏனென்றால் கல்யாண சாப்பாடு சாப்பிட்டு அலுத்துப் போனதால் இவருக்கு தனியாக வத்தல் குழம்பு அல்லது மிளகு குழம்பு, ஜீரக ரசம், சுட்ட அப்பளம் மோர் சாதத்திற்கு, மோர் மிளகாய் தயிர் சாதத்திற்கு ரொம்ப நன்றாய் இருக்கும். நடிகர் திலகம் சிவாஜியும், கதாபாத்திரமும் சேர்ந்த மாதிரி.

## எங்க முதலாளி தங்க முதலாளி

ஜெமினியில் வேலை செய்த நாள்களில் ஒரு நாள் என் சகோதரி கணவனிடமிருந்து ஒரு கார்டு வந்தது. (ஒரு கார்டு அரையணா விலை அப்போது) அதில் என் மற்றொரு தங்கைக்கு திருமணம் நிச்சயிக்கப்பட்டு விட்டதாகவும் திருமணத் தேதியும் எழுதி 500 ரூபாயுடன் உடன் வந்து

சேரும்படி எழுதியிருந்தார். இதைக் கண்ட நான் இந்த கார்டையும் இணைத்து ஒரு மனு எழுதினேன். அப்போது எனக்கு சம்பளம் 10 ரூபாயும் அலவன்ஸ் 17.80 ரூபாய். (மொத்தம் 27.80 ரூபாய்) இருபத்தி ஏழரை ரூபாயில் என் சம்பளத்தில் 25 ரூபாய் மாதாமாதம் பிடித்து கொண்டு 500 ரூபாய் கொடுக்கும்படி கேட்டிருந்தேன். மனுகொடுத்த அடுத்த நாளே ஜெனரல் ஆபீஸ் சீப் அக்கௌண்டன்ட் திரு. ராமமூர்த்தி அவர்கள் (திரு. பாபநாசம் சிவம் அவர்களின் மூத்த மருமகன்) வாசன் அவர்கள் உத்தரவுபடி, என்னைக் கூப்பிட்டு 500 ரூபாய் கொடுத்தார்கள். என் தங்கை திருமணம் சிறப்பாக நடந்தது. ஜெமினியில் நான் வேலையில் சேர்ந்த இரண்டே மாதங்களில் நடந்தது. ஜெமினியின் மகத்தான படம் சந்திரலேகா அப்போது திரைப்பட உலகத்தில் (உலகம் முழுவதும் ஹாலிவுட் உட்பட) வசூலில் 2வது இடத்தைப் பிடித்தபடம் என்று திரைப்பட வல்லுநர்கள் சொல்கிறார்கள். இந்த படத்தில் வரும் முரசாட்டம் (ட்ரம் டான்ஸ்) சுமார் 50 பேர்கள் பெண்கள் அதே அளவு ஆண்கள் ஆறு மாதம் ஒத்திகை நடந்தது. ஷூட்டிங் சமயத்தில் 4 நடன மாதர்கள் போதவில்லை. இதற்காக தஞ்சாவூர், கும்பகோணம் சென்று நடன மங்கை கிடைக்காததால், ஸ்டுடியோவில் ஆபீஸ் பாயாக வேலை செய்யும் சுமாரான அழகுள்ள பையன்களை பெண் வேடமிட்டு கடைசி டிரம்களில் நிற்க, அவர்களுக்குத் தெரிந்த அளவு ஆடவைத்து படமாக்கினார்கள். இந்த காட்சி சுமார் 1 லட்சம் அடி அளவு.

கதாநாயகனும் வில்லனும் கத்தி சண்டை பிரமாதமாக இருக்கும். ஆங்கிலப் படங்களை விட மிக பிரமாதமாக இருந்தது கத்தி சண்டை. இதில் கதாநாயகன் M.K. ராதாவிற்கு டூப்பாக சண்டை போட்டவர் ஸ்டுடியோவில் ஒலிப்பதிவாளர் ஷியாம் சுந்தர் என்பவர். இவருடைய உடல்வாகைப் பார்த்து திரு.எஸ்.எஸ். வாசன் அவர்களே M.K.ராதாவிற்கு டூப்பாக

போடச்செய்தார். *M.K.* ராதாவிற்கு இதயக் கோளாறு இருந்து வந்ததால் குளோசப் ஷாட்களில் மட்டும் ராதா நடித்தார்.

மற்ற லாங் ஷாட்களில் ஷியாம் சுந்தரும் மற்றும் ரஞ்சன் பிரமாதமாக கத்திச்சண்டை போட்டார்கள். ரஞ்சன் ஒரு உண்மையான சகல கலா வல்லவன். பரத நாட்டியம், மேல்நாட்டு நடன வகைகள், கத்திச்சண்டை, மல்யுத்தம் குதிரை சவாரி தவிர ஆகாய விமானம் ஓட்டும் பைலட் ஆகவும் இருந்தார். பல ஹிந்தி படங்களிலும் நடித்து பம்பாயிலேயே குடியேறிவிட்டார். பின்னர் சந்திரலேகா வெளிவந்ததும் ஒலிப்பதிவாளர் வேலையை ராஜினாமா செய்து விட்டு பல படங்களுக்கு ஸ்டண்ட் மாஸ்டர் ஆனார், திரு ஷியாம் சுந்தர். இவரது தாய் மொழி கன்னடம், மைசூரைச் சேர்ந்தவர்.

★ ★ ★

**நா**ன் ஜெமினி ஸ்டூடியோவில் (மெஸ்சில் வேலைக்கு சேர்ந்த நாலாம் நாள்) இரவு 7 மணிக்கு ஒருவர் மெஸ்சுக்கு வந்து இங்கு சுப்பாமணி யார்? என்று கேட்டார். அங்கு ஏதோ வேலையாய் இருந்த என் காதுகளிலும் வந்தவர் கேட்டது விழுந்ததால் ஏன் சார் நான்தான் சுப்பாமணி என்று சொல்லியபடி அவர் எதிரில் நின்றேன் பயந்தபடியே. அவர் சொன்னார். நாளைக்கு உன் அம்மாவிற்கு ஸ்ரார்த்தமாம் (தெவசம்) உன் அப்பா உன்னை வரச்சொல்லும்படி போன் மூலம் முதலாளி எஸ்.எஸ்.வாசன் அவர்களுக்கே சொல்லி விட்டார். ஆகையால் நீ நாளைக்கு லீவு போட்டுவிட்டு போகும்படி ஐயர் (ஐயர் என்றுதான் எஸ்.எஸ். வாசன் அவர்களை எல்லோரும் குறிப்பிட்டுச் சொல்லுவார் கள். ஸ்டூடியோவில்) உன்னிடம் சொல்லிவிட்டு வரும்படி என்னை அனுப்பினார், என்று வந்தவர் சொல்லி முடித்ததும் தான் எனக்குப் பயம் தெளிந்தது. பெரிய படிப்பறிவில்லாத என் தந்தையார் எப்படியோ திரு.வாசன் அவர்களுக்குப் போன்

செய்தது எனக்கு பயமாக இருந்தது. ஆனால் வாசன் அவர்கள் எதுவும் நினைத்துக்கொள்ளாமல் பையனின் தாயார் ஸ்ரார்த்தம் என்றதும் கதை விவாதத்தில் இருந்தபோதும் உடனே நரசிம்மனிடம் (கதை இலாகாவிற்கு தேவையான வற்றை எடுத்துக் கொடுப்பதுதான் அவர் வேலை) சொல்லி அனுப்பி இருக்கிறார்.

வாசன் அவர்கள் தன் தாயாரிடம் அளவில்லாத பக்தி வைத்திருந்தார். ஆபீஸ் ஸ்டூடியோ விவகாரங்களிலும் தாயாரை கலந்து முடிவெடுத்த விஷயங்கள் நிறையவே இருக்கும். எனவே தாயார்மீது எல்லோரும் அன்பும் பக்தியும் வைக்க வேண்டும். என்பதற்காகவே, இதை உடனே சொல்லி அனுப்பி இருக்கிறார்.

★ ★ ★

ஜெமினியில் வேலை செய்த நாள்களில் நான் ஒரு நடமாடும் நூலகம் நடத்தி வந்தேன். நானும் இன்னும் 7 பேர்களும் என்னுடன் நன்றாய் பழகுபவர்கள். இவன் மெஸ் சர்வர்தான் என்று வித்யாசமாக நினைக்காமல் சரிசமமாக நினைத்தவர்களாகிய அந்த 7 பேர்களுடன் நானும் ஆக 8 பேரிடமும் மாதம் ஒன்றரை ரூபாய் வீதம் 12 ரூபாய் வசூல் செய்து வரிசைப்படி ஒவ்வொரு புத்தகமும் ஒவ்வொருவரும் இரண்டு நாள்களில் படித்துவிட்டு த் திருப்பி கொடுத்து வேறு புத்தகம் வாங்கவேண்டும். படித்தவர்களின் பெயரில் உள்ள இனிஷியலை மேல் அட்டையில் எழுதி டிக் செய்து விடுவோம். 8 பேர்களுக்கும் ஏதாவதொரு புத்தகம் முதலில் படிக்க வாய்ப்பு கிடைக்கும். 1.கலைமகள் 2. அமுதசுரபி 3. காவேரி 4. பேசும் படம் 5. ஆனந்த விகடன் 6. கல்கி 7. குமுதம் 8. மஞ்சரி இதை தவிர தீபாவளி மலர்களும் வரும். மலர்களின் விலையை மொத்தமாக கூட்டி அத்தொகையை 8 பங்காக்கி வாங்கிவிடுவேன். இதன் பொறுப்புகள் என்னைச் சேர்ந்தது.

இது மிக விரிவடைந்து இன்னும் பலர் அங்கத்தினர்களாக விருப்பம் தெரிவித்தார்கள். என்னால் இயலாததால் இவர் களைத் தவிர வேறு யாரையும் சேர்த்துக் கொள்ளவில்லை.

இந்த புஸ்தகத்திற்கும் கனமான அட்டை தயாரித்து புஸ்தகத்தை அதில் வைத்து நடுபக்கத்தில் ஒரு கனமான நூலால் கட்டிவிடுவேன். அட்டையுடன்தான் படிக்க முடியும். இந்த முறையான அட்டையை எனக்கு தயாரித்து கொடுத்தவர் என்னுடைய நண்பர் துரைசாமி என்னும் ஆபீஸ்பாய். ஸ்டூடியோவிலேயே வேலை செய்பவர். புத்தகங்களின்மேல் அட்டையில் *Jai Hind* வாசக சாலை என்பதை குறிக்கும் *J.H.* என்ற இரண்டெழுத்தை மட்டும் எழுதிவிட்டு அதன் கீழ் மற்றவர்களுடைய இனிஷியலை எழுதிவிடுவோம். இப்படி இருந்த ஒரு நாள் இரவு 8 மணிக்குமேல் ஷூட்டிங் ஒன்றும் இல்லை. மெஸ்சுக்கும் இரவு வேலை அதிகம் இல்லை. கதை இலாகா எஸ்.எஸ். வாசன் தலைமையில் ஸ்டோரி டிஸ்கஷன் நடக்கும். அன்று மெஸ்சில் சாப்பிட்டு விட்டுபோய் அரை மணி நேரம் கழித்து முன்பு ஒரு முறை சுப்பாமணி யார் என்று கூப்பிட்ட நரசிம்மன் வந்தார். என்னை பார்த்து இங்கு யாராவது உங்களில் கல்கி வாங்குகிறார்களா? கடைகளில் எல்லாம் பார்த்துவிட்டு வந்துவிட்டேன். எங்கும் கிடைக்கவில்லை. ஐயருக்கு ஏதோ முக்கியமான விஷயம் பார்க்க வேண்டும். ஐயரே மெஸ்ஸில் யாராவது வாங்கு வார்கள் போய் கேட்டுப்பார் என்று என்னை அனுப்பினார். கல்கி இருந்தால் கொடு. ஐயர் பார்த்தவுடன் திருப்பிக் கொடுத்துவிடுகிறேன் என்றார். அன்று வெள்ளிக்கிழமை கல்கியும் விகடனும் ஒரே நாளில்தான் வரும். இரண்டையும் வாங்கும் வாசகர்கள் ஆயிரக்கணக்கான பேர்கள் இருந்தார்கள். கல்கியை மட்டும் முதலில் நான் படித்துவிட்டு மற்றவர்களுக்கு வரிசைப்படி கொடுப்பேன். (*J.H.* குழு வினருக்கு) நான் உடனே என் அறைக்குச் சென்று கல்கியைக்

கொண்டு வந்து கேட்டவரிடம் கொடுத்தேன். ஐயரே கேட்கிறாரே எனக்கு ரொம்ப மகிழ்ச்சி. சற்று நேரம் கழித்து அவர்களும் இரவு மெஸ்சிலேயே சாப்பிடுவார்கள். அவர்களுக்கு என்று ஸ்பெஷல் எதுவும் இல்லை. எல்லாருக்கும் பரிமாறுவதுதான். அந்த குழுவில் உள்ளவர் களை மீண்டும் ஒருமுறை சொல்கிறேன். திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள், *K.J.* மகாதேவன் (இவர் லண்டனுக்கு - *I.C.S.* படிக்க சென்று பல களியாட்டங்களில் ஈடுபட்டு *I.C.S.* -ல் பெயிலாகி திரும்பி வந்தார். பிரபலமான வக்கீல் *K.S.* ஜயராம் அய்யர் என்ற புகழ் வாழ்ந்த வக்கீலின் மூத்த மகன். எப்போதும் கையில் பைப் சிகரெட்டுடன் நன்றாக ஆடை உடுத்திக் கொண்டு காட்சி தருபவர் மிக்க பண்புள்ளவர். இவர்தான் கல்கியின் தியாக பூமி படத்தில் கதாநாயகனாக நன்றாகவே நடித்தார். அதன்பிறகு இயக்குனர் வேலையை பிடித்து கொண்டவர்) மற்றும் கதை வசன கவிஞர் நடிகர், காலக்ஷேபம் செய்பவர். இவையில் எல்லாம் ஒருவருக்கே அமைந்த கொத்தமங்கலம் சுப்பு, எழுத்தாளர் கி.ரா, சுதந்திர சங்கு என்று முழங்கிய சங்கு சுப்ரணியம், வேப்பத்தூர் கிட்டு, திண்டுக்கல் நாயினார் மற்றொருவர் மாலி சாயபு என்ற இஸ்லாமியர், ஸ்டுடியோவில் டிஸ்கஷன் டிபார்ட்மெண்டின் 2வது தலைவர் ராமசந்திரராவ் எனும் சந்துரு. அவர்கள் அனைவரும் கல்கியைத் திரும்பக் கொடுக்கும்போது என்னை பார்த்து 'சுப்பாமணி, ஐயர் உன்னைபற்றி பரவாயில்லை நான் சொல்லியபடியே மெஸ்சில் கிடைத்தது. யார் வாங்குவது அவர் பெயர் என்ன என்று கேட்டதாகவும் சொன்னார். ஐயரின் சந்தேகம் என்னால் (என்னுடைய கல்கியால்) தீர்ந்து போய்விட்டதாகவும், கல்கியில் கல்கி அவர்களே எழுதி இருந்த ஒரு தலையங்கத்தைப் பற்றி ஜெமினி கதை இலாகாவினர்கள் விவாதித்தாகவும் கூறினார். அப்போது கல்கி அவர்கள் எழுதியதைப் படிக்கவேண்டும் என்று

ஸ்டூடியோ வேனை எடுத்துகொண்டுதேட ஆயிரம் விளக்கு தேனாம்பேட்டையில் உள்ள நியூஸ் ஏஜென்சி கடைகளில் எல்லாம் தீர்ந்துபோய்விட்டதாம். ஐயரே மெஸ்சில் கேட்டுபாருங்கள் யாராவது வாங்கியிருப்பார்கள், வாங்கி வாருங்கள் படித்த உடன் திருப்பிக் கொடுத்து விடலாம் என்று சொன்ன தகவல் எனக்குக் கிடைத்ததில் நான் இன்னும் கொஞ்சம் பூரித்துப்போனேன். அந்தத் தலையங்கத்தின் பெயர், ‘பெரிய பதவியும் சின்ன புத்தியும்’. இதன் முழு விவரத்தை அறிந்து கொள்ள விரும்புகிறவர்கள் பொன்னி யின் புதல்வர் என்று சுந்தர் அவர்கள் (கல்கியின் வரலாற்றை) எழுதியதைப் படித்துப் பாருங்கள். என் அகராதியில் புத்தகம் வாங்கித் திருப்பி கொடுப்போரை போற்று வேன். அப்படி திருப்பிக் கொடுக்காதவர்களைப் போற்றவும் மாட்டேன், தூற்றவும் மாட்டேன். இவருக்கு ஏன் கொடுத்தோமென்று என்னை நானே திட்டிக்கொள்வேன். ஏனென்றால் என்னைவிட பெரிய அந்தஸ்தில் இருப்பவரை நான் எப்படி திட்ட முடியும்? இதுபோல் என்னிடம் புத்தகம் வாங்கிய இருவர் அதை திருப்பி கொடுக்காமலேயே இந்த உலகத்தைவிட்டுப் போய்விட்டார்கள். பாவம்.

ஒருவர் கொத்தமங்கலம் சுப்பு. திரு.எஸ்.ஏ.பி. அவர்கள் எழுதிய தொடராக வந்த (காதலெனும் தீவினிலே...) பைன்ட் செய்து வைத்திருந்தேன். சுப்பு அவர்கள் படித்துவிட்டுத் தருவதாகச் சொல்லி வாங்கி கொண்டு போனார். சுமார் ஒரு மாதம் ஆகியபின் அவரைக் கேட்டேன். அதற்கு அவர் K.J.M. படித்துவிட்டுத் தருவதாகச் சொன்னார். நான் அவரிடம் உன்னிடம் கொடுக்கச் சொல்லிவிட்டேன் என்றார். இப்படியாக நான் கஷ்டப்பட்டு குமுதத்தில் வந்த தொடரை எடுத்து பத்திரமாக வைத்திருந்து கதை முடிந்ததும் நண்பர் துரைசாமியிடம் கொடுத்து பைண்ட் செய்து வாங்கிவைத்தது அது ஜெமினி கதை இலாகா முழுவதும் படிக்கப்பட்டு என்

கைக்கு வராமலேயே போய்விட்டது, எஸ்.ஏ.பி. அவர்களின் முதல் தொடர்கதையான காதலெனும் தீவினிலே.

மற்றொருவர் நடிகர் ஸ்ரீராம். இவர் ஜெமினி ஸ்டூடியோவிலேயே புரோக்ராம் டிபார்ட்மென்டில் வேலை செய்தவர். நல்ல அழகுள்ள இளைஞர். சொந்தமாகப் படம் எடுக்கும் முயற்சியில் அதுவும் பெரிய எழுத்தாளர் திரு. சாண்டில்யனின் மலை வாசல் அமுதசுரபியில் தொடர்கதை யாக வந்து ஆயிரக்கணக்கான வாசகர்களை மகிழ்வித்த கதை. சிவாஜி கதாநாயகன், பிரபலமான மற்ற நடிகர்கள் நடித்த படம்; சில ஆயிரம் அடிகளே வளர்ந்தது. பின் வளரவே யில்லை. இதற்கு சிவாஜி அவர்கள் கால்ஷீட் கொடுக்காததும் பல காரணங்களில் ஒன்று என சினிமா வட்டாரம் பேசிக்கொண்டன.

ஸ்ரீராம் மலைக்கள்ளனில் நடித்தார். *M.G.R.*, பானுமதி, *M.G.* சக்கரபாணி, *T.S.* துரைராஜ் இவர்களுடன் நாமக்கல் கவிஞரின் அருமையான கதை. மு.கருணாநிதி வசனம். டைரக்ஷன் ஸ்ரீராமுலு நாயுடு. படம் பிரமாதமாக ஓடியது. இந்தியில் ஆசாத் என்ற பெயரில் திலீப் குமார் (*M.G.R.* ரோலில்) நடித்து, அதுவும் பெரிய வெற்றி அடைந்தது. ஸ்ரீராம் நடிக்க வேண்டிய பாத்திரத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளவேண்டும் என்று எண்ணி என்னிடம், மலைக்கள்ளன் புத்தகம் இருந்தால் கொடு படித்துவிட்டுத் தருகிறேன் என்று வாங்கிப்போனவர்தான். படமும் வெளியாயிற்று. இவரும் மலை வாசலினால் விழுந்தவர், எழுதிருக்க முடியாமல் கடன் சுமையால் நோய் வாய்ப்பட்டுக் காலமானார். அவர் மட்டும் சொந்தப்படம் எடுக்கும் முயற்சியில் இறங்காமல் இருந்தால் இப்படி அற்ப ஆயுளில் இறந்திருக்க மாட்டார் என்று அன்றைய சினிமா வட்டாரம் பேசியது. இப்படியாக மலைக்கள்ளனும் என்னிடம் இருந்து காணாமல் போய்விட்டது (புத்தகம்).

இவர்களை நினைக்கும்போது (தலை எழுத்து, விதி, பிராப்தம்) இந்த வார்த்தையிலும் திரு.J.K. அவர்களின் சில நேரங்களில் சில மனிதர்கள் என்ற சொற்றொடரும் ஒன்றுடன் ஒன்று சினேகிதர்களாக இருக்கிறார்கள் என்றே எனக்குத் தோன்றுகிறது.

★ ★ ★

பல ஆண்டுகளுக்கு முன்பு பம்பாய் குதிரை மைதானத்தில் இருவர் பேசிக் கொள்கிறார்கள். இருவரில் ஒருவர் பம்பாய் சேட்ஜி. மற்றவர் தென்னிந்தியர். வேஷ்டி தொளதொள அரைக் கை வைத்து கதர் சட்டை, மேல் அங்கவஸ்திரம், சேட்ஜி தம்பி நீ சொல்லும் குதிரை நிச்சயமாக வராது என்று அடித்துக் கூறினாராம். முதலில் வேஷ்டி சட்டைக்காரரோ கட்டாயமாக வரும் இந்த குதிரை என்று சொன்னாராம்.

அந்த மதராசி என்ன செய்தார்; அந்தக் குதிரையைப் பழக்கும் ஜாக்கியைக் கண்டு தனியாக பயிற்சிக்கு ஏற்பாடு செய்தாராம். அந்தக் குதிரை கலந்து கொண்ட ரேசில் இந்த மதராசியைத் தவிர அந்த சேட்ஜி உள்பட அந்த குதிரை மீது யாருமே பணம் கட்டவில்லை. என்ன ஆச்சர்யம். அந்த அரைக்கை தொள தொள கதர் சட்டையாளர் அந்த மதராசி பணம் கட்டிய குதிரை, அந்த குதிரை ஜெயிக்காது என்று சேட்ஜி அடித்துக் கூறினார். ஆனால் அந்த குதிரை மற்ற குதிரைக்கு முன்னால் பாய்ந்து வந்து முதல் ரவுண்டில் முதலில் வந்து விட்டதாம்.

அறுபதாயிரம் ரூபாய்களுடன் அந்த மதராசி அரைக்கை சட்டை மனிதரின் கையைபிடித்து குலுக்கியதும் அந்த சேட்ஜி சொன்னார்: பஹுத் அச்சா மதராசி. பின் மதராசிவாலா சேட்டுக்கும் ஜாக்கிக்கும் நன்றியும், வந்தனமும் சொல்லிவிட்டு பம்பாயிலிருந்து சென்னை வந்து சேர்ந்ததும், வீட்டில் நுழைந்ததும் தன் தாயாரைக் கூப்பிட்டு அவர்

கைகளை நீட்டச் சொல்லித் தான் கொண்டு வந்த அறுபதாயிரம் ரூபாயை அவர் கையில் கொடுத்து சாஷ்டாங்கமாகத் தன் தாயாரின் காலில் விழுந்து நமஸ்காரம் செய்துவிட்டு தாயின் கையைப்பிடித்து இனிமேல் குதிரைப் பந்தயம் (ரேஸ்) ஆடமாட்டேன் என்று சத்தியம் செய்து கொடுத்தாராம். இவர்தான் எஸ்.எஸ். வாசன் அவர்கள். அக்குதிரையின் பெயரான (ஜெமினி) ஜெமினி ஸ்டுயோவானது. வெள்ளைக் காரர் ஒருவர் மானேஜர் ஆன முதல் ஸ்டூடியோவும் இதுதான். அவர்தான் *W.J.* மோய்லன் என்பவர். இவருக்கு உதவியாளராக இருந்தவர்தான் பின்னாளில் டைரக்டர் எல்லீஸ் *R.* டங்கன் என்பவர். ஜெமினி தயாரித்த படங்களின் எண்ணிக்கை 25க்கு மேல் இராது. ஆனால் ஜெமினி ஸ்டூடியோ உலக உருண்டையில் இடம் பெற்றுவிட்டது. (இந்த விவரங்கள் அந்தக் கால பெரியவர்களால் பேசப்பட்டது.) திரு. எஸ்.எஸ்.வாசனைப் பற்றி கல்கி இப்படி எழுதினார்.

கல்கி அட்டையில் வாசன் அவர்களின் படத்தை போட்டுவிட்டு

*1 லட்சம் ரூபாய் அதிக லாபம் வந்தாலும் சரி*

*1 லட்சம் ரூபாய் நஷ்டமே வந்தாலும் சரி*

வாசன் அவர்கள் முகத்தில் எந்தவிதமான சலனமும் மாற்றமும் இருக்காது என்று எழுதியிருக்கிறார். சில நேரங்களில் சில மனிதரல்ல வாசன். மிகப்பெரிய மனிதர் எஸ்.எஸ். வாசன் எல்லா நேரங்களிலும்.

  

# இரண்டாம் பகுதி

தொழிலாளி முதலாளி பிரச்னை பற்றிய கதை ஜெமினியின் 'இரும்புத்திரை'. இப்படத்திற்கு பெயர் வைத்ததே ஒரு தொழிலாளிதான். அதுவும் ஒரு எஸ்.எஸ். வாசன் அவர்களின் ரூம் பாய் ஸ்ரீ ராமுலு என்ற ஆபீஸ்பாய். எடுத்தவரை படத்தை போட்டுக் காண்பித்து சாப்பாடும் போட்டு படம் பார்த்தவர்களிடம் (ஜெமினி ஸ்டுடியோவில் வேலையில் இருக்கும் எல்லா தரப்பு தொழிலாளர்கள்) இப்படத்திற்கு என்ன பெயர் வைக்கலாம் என்று ஒரு துண்டு சீட்டில் எழுதிக் கேட்டார் வாசன் அவர்கள். அனைவரும் அவரவர்க்குத் தோன்றியதை எழுதி பெட்டியில் போட்டார்கள். அந்த பெயரில் ஒன்றுதான் இரும்புத்திரை, அந்தப் பெயரை வாசன் தேர்ந்தெடுத்து அந்த ஆபீஸ் பாய் ஸ்ரீராமுலுவுக்கு ரூ.500 சன்மானம் கொடுத்தார். திரு.வாசன் அவர்கள் இந்த படப்பிடிப்பின்பொழுது எதனாலோ நடிகர் திலகம் அவர்கள் வாசன் அவர்களிடம் என்ன குறை கண்டாரோ தெரிய வில்லை. சரியாக பட ஷூட்டிங்கு வராமல் கால தாமதம் செய்து வந்தார். வாசன் அவர்கள் மிகப் பொறுமையாக இருந்தார். நடிகர் திலகம் முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் நேரம். 5 படங்களில் வேலை செய்து வந்தார். ஏனோ ஜெமினிக்கு மட்டும் கால்ஷீட் கொடுப்பதில்லை. ஜெமினி புரோக்ராம் ஆபீஸ் மணி என்பவர் பலமுறை நடிகர் திலகத்தை நேரில் கண்டும் சரியான பதில் சொல்லாதது மட்டுமல்லாமல், வாசன் உன்னை வேலையைவிட்டு அனுப்பிவிட்டால் கவலைப்படாதே; நான் உனக்கு வேலை போட்டுக் கொடுக்கிறேன் என்று

கூறினார். இதை அப்படியே வாசன் அவர்களிடம் கூறிவிட்டார் P.V.S. மணி. கட்டபொம்மனைச் சந்திக்க நினைத்த வெள்ளைக்கார தளபதியை பல இடங்களில் வேண்டுமென்றே அலைக்கழித்ததுபோல் சிவாஜி அவர் களால் P.V.S. மணி வெள்ளைக்காரத் தளபதியானார். திரு.எஸ்.எஸ். வாசனுக்கு இரண்டு புகழ்பெற்ற வழக்கறிஞர் கள். ஒன்று V.C. கோபாலரத்தினம். இவர் ஒரு சிறந்த நாடக அபிமானி. நாடகங்களும் எழுதி அவரே நடித்தும் இருக்கிறார். மற்றொருவர் R.M. சேஷாத்திரி. வழக்கறிஞர். அரசாங்க சட்டத்தில் எங்கெல்லாம் ஓட்டை இருக்கிறது என்று கண்ணில் விளக்கெண்ணை விட்டுக் கொண்டு பார்ப்பவர். இவரைப்பற்றி ஒரு சாம்பிள் வழக்கைச் சொல்கிறேன். மாடர்ன் தியேட்டர் தயாரித்து மு. கருணாநிதி வசனம் எழுதி G. ராமனாதன் இசையமைத்து M.G.R., கு.அ. நடராஜன் நம்பியார் போன்றோர் நடித்து பிரமாத வசூலைத் தந்த அந்தப் படத்தை T.R. சுந்தரம் அவர்கள் தெலுங்கில் டப்பிங் செய்து வெளியிட்டார். அதை தணிக்கை அதிகாரி பல இடங்களில் வெட்டச்சொல்லித் தடை விதித்து விட்டார். திரு. T.R. சுந்தரம் அவர்கள் வாசனிடம் தெரிவித்தார்.

வாசன் அவர்கள் R.M. சேஷாத்திரி அவர்களை அனுப்பினார். T.R. சுந்தரிடத்திடம் R.M. சேஷாத்திரி தணிக்கை அதிகாரிகள் மீது வழக்குபோட்டார். சேஷாத்திரியின் வாதம் 4, 5 ஆண்டுகளுக்கு முன் தமிழில் இந்த படம் வெளி வந்து தமிழ் மக்களின் பேராதரவுடன் ஓடி மகத்தான வசூலைத் தந்தது. அதே படத்தைத் தான், இப்போது மொழி மாற்றம் செய்து இருக்கிறோம். தமிழில் விதிக்கப்படாத தடையும் வெட்டும் தெலுங்கு மொழிப்படத்திற்கு விதித்தது சரி இல்லை. தமிழ் மக்களை விட தெலுங்கு மக்கள் ரசனை இல்லாதவர்களா?. ஒரு படத்தை பார்த்ததினால் அவர்களுக்கு எந்தவிதமான மன உளைச்சலும் ஏற்பட எந்த காரணமும்

இல்லை. எனவே இந்த தடை ரத்து செய்ய வேண்டும் என்ற வழக்கில் வெற்றியும் கிடைத்தது.

*R.M.* சேஷாத்திரி, வி.சி. கோபாலரத்தினம் இருவரும் சேர்ந்து திரை உலகில் முன்னுக்கு வந்து கொண்டிருக்கும் நடிகர் திலகம் திரு. சிவாஜி கணேசன் அவர்களுக்கு சட்டப்படி ஒரு நோட்டீஸ் அனுப்பினார்கள். இதன் பின் நாலே நாள்களுக்கு பிறகு ஜெமினி ஸ்டூடியோ வாசன் அறையில் இருந்த சுமார் 5 பேர்களுக்கு மெஸ்சிலிருந்து சுடச்சுட தஞ்சாவூர் டிகிரி காபி அனுப்பி வைக்கப்பட்டது. அந்த காப்பியை அருந்திய வி.ஐ.பிக்களின் பெயர்கள் திரு.ம.பொ.சி., *A.P.* நாகராஜன், சிவாஜியின் மூத்த சகோதரர் தங்கவேலு, இளைய சகோதரர் ஷண்முகம், மற்றொருவர் சிவாஜி பிலிம்ஸ் மானேஜர்.

திரு.ம.பொ.சியும் சிவாஜியின் சகோதரரும் *A.P.N.* உம் சேர்ந்து வாசன் அவர்களுக்கு வாக்குறுதி அளித்தார்கள், தங்கள் படத்தை முடிக்கும்வரை வேறு எந்த வேலையும் பார்க்காமல் இருக்கிறோம் என்று, இந்த வி.ஐ.பிக்கள் சமரசம் செய்து வைத்தார்கள். இந்தப் படம் நல்ல வெற்றி அடைந்தது. பின்னர் சிவாஜி கணேசன் அவர்கள் ஜெமினியின் படங்களில் நடித்தார். படங்கள் வெற்றியும் அடைந்தது. சிவாஜியின் இந்த நடத்தைக்கு என்ன சொல்ல?

## சில நேரங்களில் சில மனிதர்கள்

நடிகர் திலகம் சிவாஜியின் திருமண நாள் அன்று அவரை சந்தித்து உரையாடும் பாக்யம் எனக்குக் கிடைத்தது. அது என் வாழ்நாளில் உயிருள்ள வரை மறக்க முடியாத நிகழ்ச்சி. சிவாஜி அவர்களின் பெருந்தன்மையாக நடக்கும் தன்மைக்கு ஓர் சிறந்த உதாரண நிகழ்வு அது.

ஏகப்பட்டக் கூட்டம். சிவாஜி வீட்டு வாசலில் வாட்ச்மென் கதவுகளைச் சார்த்தி பூட்டுப்போட்டு ஒருவர்

நுழைகிற மாதிரி வழி இருந்தது. என் சகோதரரின் மகன் கிருஷ்ணன் என்பவன் தீவிரமான சிவாஜி ரசிகன். தன் பெயருக்கு முன்னால் சிவாஜி கிருஷ்ணன் என்று போட்டுக் கொள்வான். இவன் மாதிரி ஆயிரக்கணக்கான இளைஞர்கள் தத்தம் பெயர்களுக்கு முன்னால் சிவாஜியைப் போட்டுக் கொண்டு மகிழ்கிறார்கள். இம்மாதிரி புகழ் வேறு எந்த நடிகருக்கும் நிச்சயமாக இல்லை. இந்த கிருஷ்ணன் மாதிரி ரசிகர்கள்தான் என் நான்கு பிள்ளைகளும். சிவாஜி படத்தை யாராவது குறைவாகப் பேசினால் ரகளைதான். ஆனால் தங்கள் பெயருக்கு முன்னால் சிவாஜி என்று போட்டுக் கொள்ளவில்லை.

திரு நடிகர் திலகத்திடம் பத்து நிமிஷங்கள் பேசினேன் ஜெமினி ஸ்டூடியோ ஷூட்டிங் அவர் வந்ததும் முதலில் காபி குடிப்பார். காபி குடித்ததும் மேக்கப் ரூமுக்கு போய்விடுவார். காரை விட்டு இறங்கியதும் டேய் ரமணி என்று சத்தமாக கூப்பிட்டுக்கொண்டே இறங்குவார். ரமணி என்பவர் புளோர் அஸிஸ்டன்ட் *F.A.* நடிகர் நடிகை வந்ததும் அவர்களுக்கு தேவையானவற்றை கொடுத்து மேக்கப் போட்டு (வார்ட்ரோப்) உடையலங்காரம் செய்யப்பட்டு செட்டில் கொண்டுவிட வேண்டும். மற்றும் ஷூட்டிங் சம்பந்த வேலைகளை மற்றவர்கள் செய்யும்படி சொல்ல வேண்டும். இவருக்கு பெயர் ஆங்கிலத்தில் *F.A.* என்பார்கள். சிவாஜியின் குரலைக் கேட்டதும் இதோ வந்து விட்டேன் அண்ணா என்ற பதில் சொல்லிக்கொண்டே வேறு ஒரு பையனிடம் மெஸ்ஸுக்குப் போய் காப்பி வாங்கி வருவதற்கு அனுப்பி விடுவார் ரமணி. பாடலாசிரியர் சாகித்ய கர்த்தா திரு. பாபநாசம் சிவன் அவர்களின் இரண்டாவது மருமகன் இந்த ரமணி என்பவர் இவருடைய புத்திரர்தான் அசோக் ரமணி என்ற பிரபலமான கர்நாடக சங்கீத வித்வான். ஜெமினி ஸ்டூடியோவில் ஒரு சமயம் ஔவையார் ஷூட்டிங் நடந்தது. பாண்டியராஜ தர்பார் செட் திரு.*S.G.* கிட்டப்பாவின் சகோதரர்

சுப்பையர் என்பவர் ஜெமினியின் எல்லாப் படங்களிலும் துணை நடிகராக நடிக்க வருவார். அவரைப் பற்றி கேள்விப்பட்ட திரு. சிவாஜி அவர்கள் எவ்வளவு பெரிய சங்கீத மேதை நாடக நடிகர் திரு. கிட்டப்பாவின் சகோதரர் துணைநடிகராக நடிக்கிறார் என்று மனம் சஞ்சலம் அடைந்து அவரை வரவழைத்து குடும்ப க்ஷேமங்களை விசாரித்து விடைபெறும்பொழுது சுப்பையர் கையில் 100 ரூபாய் நோட்டு ஒன்றைக் கொடுத்தார். அவரும் முதலில் மறுத்து பின் அதைப் பெற்றுக் கொண்டார். திரு. சிவாஜியின் இந்த செயலை ஸ்டூடியோவில் எல்லாரும் பாராட்டி மகிழ்ந்தார்கள். இந்த சம்பவத்தை நான் சிவாஜி அவர்களிடம் சொல்லி நினைவுபடுத்தினேன். இதோ பார் இவரும் கிட்டப்பாவின் சகோதரர்தான் என்று என்னிடம் கூறினார். சிவாஜியின் மிக அருகில் கீழே அமர்ந்திருந்த பெரியவர் ஒருவர் என்னை இருகரம் கூப்பி வணங்கவும் நானும் அவரை வணங்கி சௌக்யமாக இருக்கிறீர்களா? என்று கேட்டேன். அவர் பலமாகத் தலையை ஆட்டி சௌக்யம்தான் என்பதற்கு சமிக்ஞை செய்தார். அவர் புதிய பட்டு வேட்டியும், பட்டு அங்கவஸ்திரமும் அணிந்திருந்தார். திருமண நாளை முன்னிட்டு சிவாஜி அவர்களுக்கு அன்பளிப்பாக அளித்திருக் கிறார் என்பது தெரிந்தது. நான் என் வீட்டிலிருந்து வேர்க் கடலையும், வெல்லப்பாகும் சேர்த்து கடலை உருண்டை பிடித்துக்கொண்டு சுமார் 100 உருண்டைகளைக் கொண்டு போயிருந்தேன். அதை சிவாஜியிடம் கொடுத்துவிட்டு என் வீட்டில் தாயார் செய்த கடலை உருண்டை, சாப்பிடுங்கள் சார் என்று நீட்டினேன். அவர் அருகில் இருந்த டீபாயின்மீது வைக்கச் சொன்னார். நானும் வைத்தேன். சிவாஜி அவர்கள், நானும் வாசன் அவர்களுக்கு கடலை உருண்டை கொடுத்திருக் கிறேனே என்றார் சிரித்தபடியே. நானும் சிரித்து மௌனமாக நின்றேன். பின் திருவழுந்தூர் சிவக்கொழுந்து என்ற சிறிய

நாவல் ஒன்று கல்கி அவர்கள் எழுதியதை சிவாஜி அவர்களிடம் கொடுத்து படித்துப் பாருங்கள் சார். இதை நீங்கள் நடித்து படமாக எடுங்கள் சார். தில்லானா மோகனாம்பாளை விட நன்றாகப் போகும் சார் என்றேன். அப்படியா என்று அதை வாங்கிக் கொண்டார். எனக்கு ஏற்பட்ட ஆனந்தத்திற்கு அளவே இல்லை. எவ்வளவு கூட்டத்தினர் தரிசிக்க முடியாமல் வாசலில் நின்று கொண்டிருக்க ரசிக மன்றத் தலைவர் திரு. பூமிநாதன் உள்ளே நின்றுகொண்டு கூட்டத்தினரை பார்த்துப் பார்த்து ஒவ்வொருவராக உள்ளே அனுப்பிக் கொண்டிருந்தார். அதிகாலையிலேயே என் சகோதரரின் மகன் திரு. சிவாஜி கிருஷ்ணன் உள்ளே சென்றுவிட்டான் அவன் மனைவியுடன். அவன்தான் பூமிநாதனிடம் என்னைக் காண்பித்து அவர் என் சித்தப்பாதான் அவரை உள்ளே விடுங்கள் சார் என்றதும் பூமிநாதன் என்னைக் காண்பித்து அந்தப் பெரியவரை உள்ளே விடு என்று வாட்ச்மென்னிடம் சொன்னதும்தான் எனக்குத் தரிசனம் கிடைத்தது. சிவாஜி அவர்களுடன் பேசிக்கொண்டிருந்தபோது ஒரு போட்டோவும் எடுத்துக் கொள்ளும் வாய்ப்பு எனக்கு என் சகோதரர் மகன் கிருஷ்ணனால் கிடைத்தது. இந்தச் சம்பவத்தை என்னால் உயிருள்ளவரை மறக்கவே முடியாது. சிவாஜி அவர்களிடம் தங்களிடம் நிறைய பேசவேண்டும் என்றேன். அதற்கென்ன தாராளமாக இன்னொரு நாள் வாருங்கள் என்று கூறினார். பூமிநாதனுக்கு, எனக்கு போன் செய்யுங்கள் நான் ஏற்பாடு செய்கிறேன் என்று கூறி அவருடைய விசிட்டிங் கார்டைக் கொடுத்தார். சிவாஜி அவர்கள் சற்றுகூட முகம் சுளிக்காமல் வந்தவர்களை எல்லாம் அன்புடன் ஏதாவது பேசித்தான் அனுப்புவார். கடல் வற்றினாலும் வற்றும் அவருடைய நடிப்பாற்றல் வற்றவே வற்றாது - இது உலகம் கண்டுகொண்டிருக்கிற உண்மை.

  

தமிழக அமைச்சர்கள் அனைவரும் தலைவர் காமராஜ் உள்பட எல்லாருக்கும் மிக நன்றாக அறிமுகமானவர் நாரதர் என்ற விகடனின் மற்றொரு பத்திரிக்கையின் (சினிமா செய்திகளும் பகுத்தறிவுப் போட்டியில் இரண்டாம், மூன்றாம் பரிசு பெற்றவர்களை தெரிந்து கொள்ள வேண்டுமானால் இந்த நாரதரை வாங்கினால் தெரியும்.) ஆசிரியர் மற்ற பொறுப்புகள் யாவும், டி.ஸ்ரீனிவாசராவ் *B.A.* (அந்த காலத்து பட்டதாரி) உலக அரசியலிலிருந்து ஒற்றவாடை தியேட்டர் வரை (சென்ட்ரல் ஸ்டேஷன் பின்புறம் உள்ளது. பிரபலமான பாய்ஸ் கம்பெனி நாடகங்கள் நடத்தப்பட்டு வந்த ஹால்) இவர் சுடச்சுட என்ற தலைப்பில் சினிமாச் செய்திகளை வெளியிடுவார். இவர் சிறந்த ரசிகர். சிறந்த சாப்பாட்டுப் பிரியர். சிறந்த மனிதர். பிறருக்குத் தன்னால் முடிந்த எல்லா உதவிகளையும் செய்வார். *M.K.T.* பாகவதர் சிறையிலிருந்து வெளி வந்ததும் இந்த நாரதர் - ஸ்ரீனிவாச ராவைப் பார்த்து தனக்கு ஜெமினியில் ஒரு படம் - திரு.வாசன் அவர்கள் டைரக்ஷனில் நடிக்க சந்தர்ப்பம் வாங்கிக் கொடுங்கள் என்று மனம் திறந்து கேட்டார். ராவ் அவர்கள் வாசனிடம் பாகவதரை அழைத்துக் கொண்டு போய் பேச வைத்து, திரு.வாசன் அவர்களும் பாகவதரிடம் வாக்கு கொடுத்து, ஜெமினி கதை இலாகாவிடம் விவாதித்து பாகவதருக்குத் தகுந்த மாதிரி கதையைத் தேடினார்கள். இரண்டு ஹிந்தி படங்களையும் பார்த்தார்கள். பலமுறை வாசனும், பாகவதரும் சந்தித்தார்கள். அதற்குள் பாகவதர் பூனாவிற்குச் சென்று 'ராஜ முக்தி' எடுத்தார். பல இடையூறுகளைத் தாண்டி படம் வெளி வந்தது. வந்த சுவடு தெரியாமல் போனது மல்லாமல் அதற்கு கதை வசனம் எழுதிய இலக்கிய எழுத்தாளர் புதுமைப் பித்தனையும் அழைத்துப் போய் விட்டது. பின்னர் பாகவதர் வாசன் சந்திப்பு வாய்ப்பு இல்லாமல் போனது. மிகச் சாதாரணமானவர்களுக்கு எல்லாம் முயற்சி செய்தும் பலன் கிடைக்கவில்லை.

இந்த நாரதர் ஸ்ரீனிவாசராவ் அவர்கள் இவரே நாடகம் எழுதி அதில் நடிக்கவும் செய்தார் ரசிக ரஞ்சனி சபாவில், ஒரு காலத்தில். ராமாயணத்திற்கு ஸ்ரீ மாருதி (அனுமார்) எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியம் வாய்ந்தவராக இருந்தார், ஜெமினி ஸ்தாபனத்திற்கும் திரு.எஸ்.எஸ். வாசன் அவர்களுக்கும். சந்திரலேகா படத்திற்கு ராதா, ரஞ்சன் இருவரும் இவர்களுடைய படையைச் சேர்ந்த வீரர்களுக்கும் சண்டைக் காட்சிப்படமாக்கப் படுவதற்கு முன்பாக கதையின்படி, கபடமாய் ஆட்சியைப் பிடித்த (சகோதரனின்) ரஞ்சன் படைகள் அணிவகுத்துச் செல்வதுபோல் ஒரு காட்சி எடுக்கவேண்டும் என்று வாசன் விரும்பினார். அந்தப்படை வீரர்கள் அனைவரும் துப்பாக்கியுடன் இருக்கவேண்டும், வீரர்கள் தத்ரூபமாக இருக்கவேண்டும் என்பதற்காக வாசன் அவர்களின் மூளை வேலை செய்தது. இந்த வீரர்களுக்குப் பதிலாக அரசாங்க ரிசர்வ் போலீசையே போட நினைத்து ஸ்ரீ நாரதர் ஸ்ரீனிவாசராவை அழைத்து அப்பொழுது உள்துறை அமைச்சராக இருந்த திரு.பக்தவத்சலத்திடம் தூதாக அனுப்பினார். திரு. வாசன் அவர்கள் ஸ்ரீராம தூதன் ஸ்ரீ ஆஞ்சனேயனைப் போல் காரியத்தை வெற்றிகரமாக முடித்துக்கொண்டு வந்தார் நாரதர். டி. ஸ்ரீனிவாச ராவ் அவர்கள். இதில் மற்றொரு சிறப்பு அவர்கள் 400 போலீசாருக்கு அதே உடையும் அவர்களுடைய நீண்ட துப்பாக்கியும் தலைக்கு மட்டும் வேறு தொப்பி மட்டும் தயாரித்து போட்டு அழகு படுத்திவிட்டார் ஆர்ட் டைரக்டர் திரு.*A.K.* சேகர். இவ்வளவும் ஒரே ஒரு முறை கையில் துப்பாக்கியுடன் ராணுவ நடை நடப்பதுபோல் ஒரே ஷாட். இவர்களுக்கு செலவு என்ன தெரியுமா? அந்த 400 போலீஸ்காரர்களுக்கு மெஸ்ஸில் சாப்பாடு போட்டது மட்டுமே. அரை மணியில் காட்சி படமாக்கப்பட்டது. இந்த ஸ்ரீனிவாசராவ் அவர்கள் காலை 11 மணிக்கு கையில் விலை

உயர்ந்த கேமராவும் மோட்டார் சைக்கிளுமாகப் பல இடங்கள் சுற்றித் தானே செய்திகளையும் பேட்டியும் போட்டோவும் எடுப்பார். பகல் 2 மணிக்குள் வேலையை முடித்துக்கொண்டு ஜெமினி ஸ்டுடியோ மெஸ்ஸில்தான் அதுவும் சமையல் கூடத்தில்தான் சாப்பிடுவார். இரவிலும் சில நாள்களில் 10 மணிக்குமேல் ஆகும். இவருக்கு எல்லாம் எடுத்துவைத்துப் பரிமாறுவோம். எங்களிடம் மெஸ் ஆள்கள் தானே என்று நினைக்காமல் சகஜமாக எல்லா விஷயங்களும் பேசுவர். இவரிடம் இன்னொரு சிறப்பு. ஆபீஸ் வேலையாகத்தான் தாமதமாக சாப்பிட வருவார். ஆனாலும் தன்னுடைய சொந்தக்கணக்கில்தான் சாப்பிடுவார். ஒரு வேளைகூட ஆபீசின் கணக்கில் சாப்பிட்டதில்லை. நாரதர் ஸ்ரீனிவாசராவ் அவர்களுக்கு அந்த கால சென்னை நகர பிரமுகர்கள் எல்லோரிடமும் நல்ல செல்வாக்குப் பெற்றவர். திரு.எஸ்.எஸ். வாசன் அவர்களை ஆனந்த விகடன் படிப்பவர்களுக்கு மட்டும்தான் தெரியும். அன்னை கஸ்தூரி பாய் காந்தி காலம் சென்றதும் சில நாள் பொறுத்து அன்னையின் நினைவு நிதி திரட்டினார்கள். தமிழ்நாட்டில் அந்த காலத்தில் எஸ்.எஸ்.வாசன் கொடுத்த தொகை மிகப் பெரிய அளவில் தமிழ்நாட்டில் வேறுயாரும் கொடுக்காத தொகை 25,000 ரூபாய்.

தமிழ்நாட்டில் உள்ள ஆங்கில தமிழ் தினசரிப் பத்திரிக்கையில் இவருடைய போட்டோவும், செய்தியும் வெளிவந்து தமிழ்நாட்டில் ஒரு மிகச்சிறந்த பிரமுகர் என்ற அந்தஸ்தை ஏற்படுத்தியது. சிலகாலம் சென்றது. வாசன் அவர்கள் ஜெமினி பிக்சர் சர்க்யூட் G.P.C. படங்களுக்கு பணம் கொடுத்து அதன் விநியோக உரிமையை வாங்கிக்கொள்வார். பின்னர்தான் ஜெமினி ஸ்டுடியோ உதயம் ஆனது. படங்களும் தானே தயாரித்தார். அப்போது மீண்டும் ஒரு குண்டைப் போட்டார் திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள். அது என்ன? இதோ படியுங்கள் பாரதத்தின் முதல் ஜனாதிபதி உயர்திரு.

ராஜேந்திர பிரசாத் அவர்களை ஜெமினி ஸ்டுடியோவிற்கே வரவழைத்துத் தமிழக அமைச்சர்கள் திரு. காமராஜ், திரு. பக்தவத்சலம் மற்றும் பலர் முன்னிலையில் மகாத்மா காந்திஜியின் நினைவு நிதிக்கு 1 லட்சம் ரூபாய் காசோலையை ஜனாதிபதி அவர்களிடம் கொடுத்தார் வாசன் அவர்கள். அது மட்டுமல்லாமல் தன்னுடைய ஸ்தாபன ஊழியர்களின் விருப்பத்தின்படி எல்லாருடைய ஒரு நாள் சம்பளத்தைப் பெற்று நிதியில் சேர்க்கச் செய்தார். இதேபோல் மற்றொருவர் காங்கிரஸ்காரரும் தொழில் அதிபரும் ஆன பொள்ளாச்சி திரு.நா.மகாலிங்கம் என்று அழைக்கப்படும் காஞ்சி பெரியவர்களால் (முக்தி அடைந்தவர்) அருட்செல்வர் என்ற பட்டம் பெற்றவரும் மகாத்மா காந்திஜியின் நினைவு நிதிக்கு 1 லட்சம் ரூபாய் கொடுத்தார். இம்மாதிரி அருட்செல்வர்கள், அமைச்சர்களாக இருந்திருந்தால் தமிழ்நாடு என்றோ தலை நிமிர்ந்து நின்றிருக்கும்.

*சில நேரங்களில் சில மனிதர்கள் அற்புதமாக ஒளி வீசுகிறார்கள்.*

எல்லோரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே இந்த வாசகம் ஆனந்த விகடனின் தலைப்புச் செய்தி. இந்த செய்திக்குப் புறம்பாக திரு. வாசன் அவர்கள் என்றும் நடந்து கொண்டதே இல்லை. இது சத்தியம். ஆனால் சில நேரங்களில் சில மனிதர்கள் (J.K. யின் வார்த்தை) ரூபமாக யூனியன் பிறந்தது. பயன் பெற்ற தாயையே விழுங்கியது. அமைச்சரவையின் அதிரடி மாற்றங்கள்போல் பெருந்தலைகளும் மாற்றங்கள். சகல தொழிலாளர்களுக்கும் மாற்றங்கள். விளைவு தினசரி ஷூட்டிங்கும் வேலையும் இருந்தாலும் இல்லாவிட்டாலும் மாதச் சம்பளம், போனசும் இன்கிரிமெண்டும் வாங்கியது போய் வேலை செய்தால் மட்டும் காசு என்ற ஒப்பந்தம் வந்தது. வெய்யிலையே பார்த்திராதவர்கள் இப்பொழுது நிழலையே பார்க்க முடியாதவர் களானார்கள். நாரதர் என்ற

பத்திரிக்கையும் நிறுத்தப்பட்டது. சுடச்சுட உண்மையான செய்திகளைக் கொடுத்த டி.ஸ்ரீனிவாச ராவ் அவர்கள் வாசன் அவர்களிடம் சுமார் இருபத்தி ஐந்து ஆண்டுகள் என் தோள்மீது சுமந்த கேமராவை மட்டும் எனக்கு உங்கள் நினைவாக கொடுங்கள் என்று கேட்டார். உயர்திரு. வாசன் அவர்கள் இன்னும் ஒரு படி மேலே போய் காமிராவும் நாரதரையும் உனக்கே எடுத்துக்கொள் என்று கொடுத்துவிட்டார். நாரதர் பத்திரிக்கை வெளியில் அச்சிட்டு பல ஆண்டுகள் நடந்து வாரிசு இல்லாமல் நின்றுபோனது. அச்சமயம் வெகுகாலமாக விகடனில் பகுத்தறிவுப்போட்டி என்று நடத்தி வந்தார் வாசன். அதற்கு ஐந்திலிருந்து 50,000 வரை கொடுத்தார். பம்பாயிலிருந்து இல்லஸ்ட்ரேட்டட் வீக்லி ஆங்கிலப் பத்திரிக்கையும், கிராஸ் வேர்ட் என்று நடத்தி வந்தது. அதுவும் பரிசுகள் வைத்திருந்தது.

இந்த பகுத்தறிவு போட்டியை ராஜாஜி எதிர்த்தார் இது ஒரு வகையான சூதாட்டம் என ராஜாஜி கல்கி போன்றோர் கருதினார்கள். மேலும் ஒரு கருத்து பரவியது. பகுத்தறிவு போட்டியினால்தான் விகடன் விற்பனையை அதிகரிக்கிறது என்று சிலர் பேசுவதாக அதிபர் வாசன் அவர்களுடைய காதிற்கு எட்டியது.

உடனே வாசன் அவர்கள் பகுத்தறிவு போட்டியை நிறுத்திவிட்டார். அதன் காரணமாக நாரதர் பத்திரிக்கையும் நிறுத்தப்பட்டது. பகுத்தறிவு போட்டியினால்தான் விற்பனை அதிகரித்திருப்பதாகக் கூறப்பட்ட பொய்யை ஒரு சவாலாக ஏற்றுக்கொண்டு உடன் செயல்பட்டார். இந்த கிசுகிசு பொய் பிசுபிசுத்தது. இதேபோல் விகடனின் பவழ விழா ஆண்டில் தற்போதைய விகடன் ஆசிரியர் பாலசுப்ரமணியம் அவர்கள் தினமும் ஒரு சவரன் என்று ஒரு போட்டி வைத்தார். அதில் பலர் வென்றனர். ஆனால் நுகர்வோர் அமைப்பு இதை ஆட்சேபித்து ஒரு கடிதம் விகடனுக்கு எழுதியது. கடிதம் கிடைத்த மறு வாரமே சவரன் அளிக்கும் போட்டியை நிறுத்திவிட்டார் ஆசிரியர் பாலன் அவர்கள்.

ஆனந்த விகடனில் ஒரு துணுக்கு (கேலிச்சித்திரம்) வெளியிட்டதற்காக அதன் கருத்து இப்படி இருந்தது. அரசியல்வாதிகள் சிலர் முகமூடிக் கொள்ளைக்காரனாகவும், ஜேப்படித் திருடனாகவும் இருக்கிறார்கள் என்று எண்ணும் படி இருந்தது அன்றைய அரசுக்கு பிடிக்காததால், விகடன் ஆசிரியருக்கு வானளாவிய அதிகாரம் படைத்த அரசு 3 மாதம் சிறைத்தண்டனை விதித்தது. பகல் 2 மணிக்கு வானொலியில் மேல்படி செய்தி வாசிக்கப்பட்டதைக் கேட்ட விகடன் ஆசிரியர் அன்று வெள்ளிக்கிழமை, படப்பையில் தன்னுடைய பண்ணை வீட்டில் இருந்தார். உடனே தன்னுடைய பண்ணை வேலையை அப்படியே விட்டு தன் காரில் புறப்பட்டு உடனடியாக போலீஸ் கமிஷனரிடம் தம்மை ஒப்படைத்துக்கொண்டார். இது தமிழ்நாடு மட்டுமல்ல அகில இந்தியாவிலும் பரபரப்பை ஏற்படுத்தி எல்லாதரப்பு மக்களையும் அதிர்ச்சி அடையச் செய்தது. அப்போதய முதல்வர், உயர்திரு. *M.G.R.* அவர்கள் அமெரிக்காவில் நோய்வாய்ப்பட்டு சிகிச்சையில் இருந்தார். இச்செய்தி அறிந்த அவர், உடனே ஆசிரியர் திரு. பாலன் அவர்களை விடுதலை செய்யும்படி அமெரிக்காவிலிருந்தபடியே உத்தரவிட்டார். இருந்தாலும், பாலன் அவர்கள் இரண்டரை நாள் சிறைவாசம் அனுபவித்து திங்கள் கிழமைதான் விடுதலை ஆனார். புலிக்குப் பிறந்தது பூனை ஆகாது என்பதை கம்பீரமாக நிரூபித்தார் ஆனந்த விகடன் ஆசிரியர் திரு. பாலசுப்ரமணியம் அவர்கள்.

இளம் வயதில் எந்தக் கஷ்டமும் பட்டதில்லை பாலன் அவர்கள். ஆனால் பிறருடைய கஷ்டங்களை கம்யூட்டர்போல் துல்லியமாகக் கணித்து அதற்கு பரிகாரம் எவ்வளவு செலவானாலும் செய்யாமல் இருக்க முடியாது, அவரால். அவ்வளவு உயர்ந்த குணமும் எதற்கும் அஞ்சாத துணிச்சல் கண்யமானதாகவும் அறிவுச்சுடர் பரவுவதாகவும் இருக்கும். இல்லை என்றால், ஒரு கேலிச்சித்திரம் தன்

பத்திரிகையில் போட்டதற்காக உலகிலேயே இவர் ஒருவர் சிறை தண்டனை பெற்றபின் அதை எதிர்த்து வழக்காடி. அதில் வெற்றியும் வழக்கின் செலவையும் பெற்றுக்கொண்ட கின்னஸ் சாதனை புரிந்த ஆனந்த விகடன் பத்திரிக்கை ஆசிரியர் அதிபர் திரு.எஸ். பாலசுப்பரமணியம் அவர்கள் இப்படிப்பட்ட சிந்தனையாளர் ஆயிரம் குடும்பங்கள் பிழைக்கவும் தமிழர்களின் பெருமையை இந்தியாவும் ஏன் உலக முழுக்க தன் தந்தையாரால் பெருமை அடைந்த (எங்கள் குழலோசை) எல்லோர்க்கும் இன்பம் தரும் என்ற தலைப்பு செய்தி தந்து கொண்டிருந்த ஜெமினி ஸ்டுடியோவை ஏன் மூடிவிட்டார். இதற்குப் பதில் :- ஜெயகாந்தனின் ''சில நேரங்களில் சில மனிதர்கள்''

★ ★ ★

ஒரு நாள் மாலை 6 மணிக்கு ஔவையார் படப்பாடல் இரண்டு ரிக்கார்ட் செய்வதற்காக *K.B.S.* அவர்கள் ஐந்தரை மணிக்கு வந்துவிட்டார்கள். பாடல்களை எழுதி முன் கூட்டியே *K.B.S.* அவர்களிடம் கொடுத்தாகிவிட்டது. அவர் வீட்டிலேயே மனப்பாடம் செய்துகொண்டு வந்துவிடுவார். அப்பொழுது டைரக்டர் முருகதாஸ் என்ற மிகப் பெரிய புகழ் வாய்ந்தவர். கேமரா மேதை ராம்நாத், ஆர்ட் டைரக்டர் *A.K.* சேகர் மூவரும் மிகப் பிரபலமானவர்கள் அக்காலத்தில். அன்றைய தினம் 2 பாடல் பதிவு செய்ய இரவு 12 மணி ஆகிவிட்டது. பாடல் ரிக்கார்டிங் முடித்துவிட்டு இரவு 12 மணிக்குத் தான் டைரக்டர் முருகதாஸ், *K.B.S.* உதவி டைரக்டர், கிட்டப்பா இவர்கள் எல்லாரும் மெஸ்ஸுக்குச் சாப்பிடவந்தார்கள். இவர்களுக்குச் சாப்பாடு போட்ட பின்தான் மெஸ்ஸுக்கு வேலை முடிந்தது. டைரக்டர் முருகதாஸ் தன் மனத்திற்கு முழு திருப்தி ஏற்படும் வரை நடிக, நடிகையரை விடமாட்டார். சம்பந்தப்பட்டவர்களும் இவர் முழுத்திருப்தி அடைந்து *OM* சொல்லும் வரை ஒத்துழைப்பு

கொடுப்பார்கள். எவ்வளவு பெரிய நடிகர் நடிகையாக இருந்தாலும் சரி. உதாரணம் இதோ:- *K.B.S.* அவர்களின் பாடல் ரிக்கார்டிங் ஒரு உதாரணம். இவர்களுக்கெல்லாம் மெஸ்சில் ஒரு ஐட்டமும் குறையாமல் பறிமாற வேண்டும். தவறினால் மெஸ் சூப்ரண்டுக்கும் பரிமாறியவர்க்கும் விளக்கம் கேட்டு நோட்டீஸ் வந்துவிடும் ஸ்டூடியோ தலைமை மேலாளரிடமிருந்து.

ஒரு நாள் இரவு 2 பட ஷூட்டிங் நடந்தது. இரண்டு யூனிட்டைச் சார்ந்தவர் எல்லோரும் சாப்பிட்டு போய் விட்டார்கள். சாப்பிட்ட பின் 11 மணிக்கு இரவு ஷூட்டிங் நடக்கும். எல்லாருக்கும் ஒரு ரவுண்ட் காபி கொடுக்க வேண்டும். மெஸ்சில் ஒவ்வொரு நாளும் இரண்டு பேர்கள் நைட்டியூட்டி பார்க்கவேண்டும். ஷூட்டிங் முடியும் வரை ஒரு சர்வர் ஒரு கிளினர் இவர்கள் ஷூட்டிங் முடிந்தபின் மிச்ச மிருந்த தயிருக்கு உறை ஊற்றிவிட்டு படுக்கச் செல்லலாம். இது தினசரி உள்ள ஏற்பாடு.

இந்த இரண்டு ஷூட்டிங்கள் சம்பந்தபட்ட சவுண்ட் ரிக்கார்டிஸ்டுகள் 2 பேர்கள் (பாபு, சேகர்) என்பவர்கள் ஒலிப்பதிவு செய்யப்படும் கருவியில் ஏதோ சிறிய கோளாறு. அதை சரிசெய்து விட்டு அவ்விருவரும் சாப்பிட பத்தரை மணிக்கு வந்தார்கள். அன்றைய நைட் டியூட்டியில் இருந்த கிருஷ்ணமூர்த்தி என்ற சர்வர், இருவர்களுக்கும் இலை போட்டு பரிமாறினான். அப்பொழுது அவனுக்கு இவர்கள் தாமதமாக சாப்பிட வந்தது பிடிக்காததால் வேண்டுமென்றே ஒரு டின் நிறைய அப்பளம் இருந்தும் போடாமல் விட்டுவிட்டான். இருவரில் ஒருவர் பாபு என்பவர் ஏன் கிருஷ்ணா அப்பளம் இல்லையா? என்று கேட்க இல்லை என்று சற்று ரப் ஆகவும் பதில் சொல்லிவிட்டார்கள். அவர்களுக்கும் நேரத்திற்குச் சாப்பிட முடியவில்லை என்ற கோபத்தை அந்த மக்கர் செய்த ஒலிக்கருவிமீது காண்பிக்க

முடியாததால் கிருஷ்ணன் சொன்ன பதில் அவர்களுடைய நெஞ்சில் நன்றாய் பதிவாகியுள்ளது. பாபு என்பவர் கேட்டார் நாங்கள் சாப்பிடவில்லை என்று உனக்குத் தெரிந்திருக்குமே; எங்களுக்குத் தேவையானதை ரிசர்வ் செய்ய வேண்டாமா? என்று சொல்லி இது வேறு இடமாக இருந்தால் சும்மாவிட மாட்டோம் என்றார். இதை கேட்ட கிருஷ்ணமூர்த்தியும் தானும் சாப்பிடும் இலையைவிட்டு ஏக காலத்தில் எழுந்திருந்து, முதலில் பாபு என்பவர் கிருஷ்ணன் கன்னத்தில் பளார் என்று ஒரு அறை. மேஜையில் இருந்த கிளாசைத் தூக்கி கிருஷ்ணமூர்த்தி முகத்தில் வீசினார். நாற்காலியைத் தூக்கி இவர்கள் இருவர் மேலும் வீசினார். கிருஷ்ணமூர்த்தி மேஜையில் உட்கார்ந்து அன்றைய மெஸ் சம்பந்தப்பட்ட கணக்குகளை எழுதிக்கொண்டிருந்த கோபால கிருஷ்ணன் என்பவர் ஓடி வந்து பாபு, சேகர் இருவர்களையும் விலக்க ப்படாதபட்டு பாபுவை அப்படியே தன் கைகளாலும் கட்டி பிடித்திழுத்தபடியே வெளியில் கொண்டு வந்துவிட்ட பிறகுதான் அந்த இருவர்களும் அமைதி ஆனார்கள். கிருஷ்ணமூர்த்தியிடம் நடந்த விவரங்களைக் கேட்டறிந்து கொண்டார். அவர்கள் இருவரும் சாப்பிடாமலேயே சென்று விட்டார்கள். இந்த சம்பவம் நடந்த பிறகு பாபுவும் சேகரும் மெஸ் பக்கம் வரவில்லை எந்த மேலதிகாரிகளிடமும் இதை பற்றிக் கூறவில்லை.

சேகரும் பாபுவும் தலைமை ஒளிப்பதிவாளர் *C.E.* பிக்ஸ் என்ற (ஆங்கிலோ இந்தியன்) ஜெமினி ஸ்டுடியோவில் சீப் டெக்னிஷியன் களில் ஒருவர். இவருடைய உதவியாளர்கள் சேகரும் பாபுவும் மெஸ்ஸுக்கு சாப்பிட மட்டும் வருவ தில்லையே தவிர ஷூட்டிங் சமயத்திலும் மற்ற சமயங்களிலும் தங்களுக்கு தேவையான டிபன் காபி எல்லாம் அவர்களுக் கென்றே இருக்கும் (சவுண்ட் பாய்) என்பவரிடம் வாங்கி வரச் சொல்லி சாப்பிடுவார்கள். இது விவகாரம் சுமார் 3 மாதங் களுக்குப் பிறகுதான் முதலாளி வாசன் காதுக்கு எட்டியது.

வாசன் அவர்களின் நிர்வாகம் எப்படி என்று தெரிந்து கொள்ளுங்கள். மூன்று பேர்களையும் தனித்தனியாகத் தன்னுடைய அறைக்கு வரவழைத்து விசாரித்தார். அவர்கள் சொன்னதைப் பதிவு செய்து கொண்டார் மனதில். பின்னர் மெஸ் சூப்ரடன்ட் *T.R.* ராஜகோபாலய்யரை அழைத்து மெஸ்ஸில் வேலை செய்யும் அந்த பையன் எப்படி இருப்பான் பொதுவாக அவனுடைய பயோ டேட்டாவைக் கேட்டார். அவர் அளித்த பதில்: அந்த பையனுடைய (கிருஷ்ணமூர்த்தி) பேச்சு சற்று ரப் ஆக இருக்கும் மற்றபடி எதுவும் இல்லை என்று கூறி இருக்கிறார். ஏனென்றால் அச்சம்பவம் பற்றி இவருக்கே ஒன்றும் தெரியாது. இவரிடம் யாரும் எந்தப் புகாரும் கொடுக்கவில்லை. ஆதலால் அவர் யதார்த்தமாக சொல்லிவிட்டு வந்துவிட்டார். இது நடந்து ஒரு வாரம் கழித்து நானும் கிருஷ்ணமூர்த்தியும் எங்களுக்கு டியூட்டி இல்லாததால் ஏதோ ஒரு சினிமாவுக்குச் சென்று இரவு 9 மணி அளவில் ஸ்டூடியோவிற்குள் நுழைந்தோம். அச்சமயம் ஜெனரல் ஆபீசில் இருக்கும் ஹரிகிருஷ்ணன் என்பவர் எங்களை பார்த்து கிருஷ்ணமூர்த்தி கொஞ்சம் நில் என்றார். இருவரும் நின்றோம். ஹரிகிருஷ்ணன் தன்னிடமிருந்த ஒரு கவரை கிருஷ்ணமூர்த்தியிடம் கொடுத்து கை எழுத்தும் பெற்றுக்கொண்டு போய்விட்டார்.

நாங்கள் இருவரும் மெஸ்ஸின் பின்பக்கம் உள்ள எங்கள் அறைக்குப் போய் அந்த கவரை பிரித்துப் படித்தான் கிருஷ்ண மூர்த்தி. அதில் அவனைச் சரிவர தன்னுடைய வேலை செய்யாததுமல்லாமல் பாபு-சேகர் இருவர்களிடமும் சச்சரவு இட்டது குற்றம் மேலும் டெக்னிஷியன்ஸ் எப்பொழுது சாப்பிட வந்தாலும் அவர்களுக்கென்று உள்ளதை பரிமாறாத தால் உன்னை இன்றுடன் டிஸ்மிஸ் செய்கிறோம்; ஸ்டூடியோ நிர்வாகம் என டைப் அடிக்கப்பட்டிருந்தது. அந்த டிஸ்மிஸ் கவரைப் படித்த கிருஷ்ணமூர்த்தியின் முகத்தில் எவ்வித

சலனமும் இல்லை. அவன் சுபாவமே கம்யூனிஸ்ட் சிந்தனை கலந்தது. சுயமரியாதையும், தன்னம்பிக்கையும் அதிகமாக கொண்டவன். மறுநாள் ஜெனரல் ஆபீசுக்கு தானே சென்று சீப் அக்கௌண்டன்டிடம் கணக்கைத் தீர்த்து சம்பளம் பெற்று கொண்டு பெட்டி படுக்கையுடன் என்னிடம் மட்டும் சொல்லிக்கொண்டு போய்விட்டான். எனக்கும் மனம் வேதனைதான். இவன் மட்டும் அவர்களிடம் வாயாடாமல் இருந்திருந்தால் இப்படி நடந்திருக்காது. அவர்களுக்குப் பசிநேரம் கடந்து சாப்பிட வந்ததில் இவனுக்குக் கோபம் என்ன சொல்வது மீண்டும் J.K. தான் (சில நேரங்களில் சில மனிதர்கள்)

அவனுடைய தகப்பனார் பெரிய டிராயிங் மாஸ்டராக இருந்தவர். இதில் முழு கவனம் செலுத்தினான். நுங்கம் பாக்கத்தில் கிருஷ்ணமூர்த்தியின் சகோதரியும், தாயாரும் இருந்தார்கள். சகோதரி கோபாலபுரத்தில் ஒரு பள்ளியில் டீச்சர் உத்யோகம். சகோதரிக்கு கணவர் இல்லை. ஒரே பெண்ணுடனும் தாயாருடனும் வசித்து வந்தார்கள். வேலையை விட்டதும் கிருஷ்ணமூர்த்தியும் அவர்களுடன் சேர்ந்து வசிக்கலானான். இவன் வரைந்த சித்திரங்கள் கலைமகளில் வெளிவந்திருக்கிறது. சிறுகதைகளுக்கான சித்திரங்கள் இந்த குழூவிற்கு ஒரு நல்ல வாய்ப்பை ஏற்படுத்திக் கொடுத்தவர்.

ஜெமினி ஸ்டூடியோவில் ஒரு நூலகம் இருந்தது. சுமார் 1500 புத்தகங்கள் பழைய வடுவூர் துரைசாமி அய்யங்கார் J.R. ரங்கராஜு, வை.மு. கோதை நாயகி அம்மாள் இன்னும் பலர் எழுதியவை திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள் எழுதிய இரண்டு நூல்களும் இருந்தன. ஒன்றின் பெயர் புஷ்பவல்லி அல்லது கணவனை ஏமாற்றிய காரிகை. அநேகமாய் அந்தக் காலத்தில் வரும் நாவல்களுக்கெல்லாம் இரண்டு பெயர் வைப்பது வழக்கம். மற்றொன்று 'இல்வாழ்க்கையின் இன்ப ரகசியங்

கள்' (இதற்கு மட்டும் விதிவிலக்காக ஒரே பெயர்) இந்த நூலகத்தின் நூலகராக திரு.G. சதாசிவம் என்பவர் இருந்தார். இவர் எழுத்தாளரும்கூட. இவர் மெஸ்சில் எல்லாரிடமும் சகஜமாகப் பழகுவார். நல்ல நண்பராகவும் இருப்பார். இவருக்கு கிருஷ்ணமூர்த்தியின் நிலைமை தெரிந்தது; உடனே அவர் செய்த காரியம் மிகப் பெரியது. கிருஷ்ணமூர்த்தியைக் கையோடு அழைத்துகொண்டு குமுதம் காரியாலயத்தில் ஆசிரியர் திரு.எஸ்.ஏ.பி. அவர்களிடம் அறிமுகப்படுத்தி அப்பொழுதே லே-அவுட் முறையில் சில வேலைகளைச் செய்யச் சொன்னார். எஸ்.ஏ.பி. அவர்கள். சுமார் 10 நிமிடங்களில் இதைச் செய்து காண்பித்தார் கிருஷ்ணமூர்த்தி, எஸ்.ஏ.பி. அவர்களுக்கு கிருஷ்ணமூர்த்தியின் வேலை மிகவும் பிடித்துப்போயிற்று. அடுத்த நாளிலிருந்து குமுதம் ஓவியரானான் கிருஷ்ணமூர்த்தி. குமுதத்தில் ஓவியரான கிருஷ்ணமூர்த்தி, வெளியில் மேலும் சில பத்திரிக்கை களுக்கும் படம் வரையலாம், குமுதம் அலுவலக வேலை இல்லாத நேரத்தில்; என்று எஸ்.ஏ.பி. அவர்கள் கிருஷ்ண மூர்த்திக்குப் பெரிய மனதுடன் சலுகை அளித்திருந்தார். அதைப் பயன்படுத்திகொண்டு தேவி, ஆனந்த விகடன், கல்கண்டு முதலிய பத்திரிக்கைகளிலும் கிருஷ்ணமூர்த்தியின் கை வண்ணம் வந்தது. வருமானமும் வளர்ந்தது. தன்னுடைய இரண்டு பெண்களையும் ஒரே பையனையும் நன்றாய்ப் படிக்க வைத்து இருவருக்கும் நல்ல அரசாங்க வேலையும் கிடைத்தது. K.K. நகரில் சொந்த வீடும், 2 பெண்களுக்கும் ஒரு நல்ல இடத்தில் திருமணமும் செய்து கொடுத்தான். பையன் ஆடிட்டருக்குப் படித்து சிங்கப்பூரில் ஒரு தனியார் துறையில் நல்ல சம்பளத்தில் வேலைபார்க்கிறான். இப்பொழுது பையனுக்கும் திருமணமாகித் தாத்தாவாகி விட்டார். கிருஷ்ணமூர்த்தி என்னுடன் வேலை செய்தபொழுது எனக்கு நண்பன் ஆனார். இது நாள் வரை எங்கள் நட்பு

நீடித்துக்கொண்டு இருக்கிறது. இவர் வீடு கட்டவும், பெண்கள் திருமணத்திற்கும் கடன் கொடுத்தவர்களில் இரண்டு பேர்களை என்னிடம் கூறி மகிழ்ச்சி அடைவார். மறைந்த திரு. தமிழ்வாணன் அவர்களையும் தற்போதைய கல்கண்டு ஆசிரியர் திரு.லேனா தமிழ்வாணன் அவர்கள்தான். (சில நேரங்களில் சில மனிதர்கள்) நல்லவர்களும் இருக்கிறார் என்பதற்கு மறைந்த G.சதாசிவம் (ஜாம்பவான் என்று ஒரு புனைப்பெயரில் தினமணியில் சினிமா செய்திகளை எழுதிவந்தார்.) மறைந்த ஆசிரியர் குமுதம் எஸ்.ஏ.பி. அவர்களும் மறைந்த தமிழ்வாணன் அவர்களும் எடுத்துக் காட்டுபவர்களாக இருந்தார்கள்.

இந்த பண்பாளர்க்கு நேர்மாறாக நடந்துகொண்ட ஒரு பிரபலமான எழுத்தாளரைப் பற்றி ஒரு செய்தி. தினமணி ஆபீசில் கேன்டீன் நடத்திக் கொண்டிருந்த சமயம். எழுத்தாளர் அரவிந்தனும், நீலமணி என்பவரும், ஜாம்பவான் இன்னும் பலர் ஆசிரியர் குழுவில் இருந்தார்கள். அப்பொழுது ஆனந்த விகடனில் இருந்த சாவி அவர்கள் தினமணி கதிருக்கு வருவதற்கான முயற்சியில் இருந்தார். அப்போதைய கதிர் ஆசிரியர் துமிலன் அவர்கள் தினமணியைவிட்டுப் போய் விட்டார். ஆனந்த விகடனில் இருந்த சாவி அவர்களுக்கும் மணியனுக்கும் அடிக்கடி மோதல் ஏற்படும். விகடன் ஆசிரியர் சாவியை வெளியில் அனுப்பிவிட சமயம் பார்த்துக் கொண்டிருந்தார். இந்த சமயத்தில் கதிரில் உதவி ஆசிரியர் குழுவில் இருந்த இ. ராஜப்பா என்பவர் என்னுடைய நண்பர். நானும் அவரும் ராயப்போட்டை நல்லண்ண முதலி தெருவில் ஒரே வீட்டில் குடி இருந்தோம். அப்பொழுது ராஜப்பாதான் சாவி, தினமணிகதிருக்கு வருவதற்குத் தூதனாக ஆனந்த விகடன் ஆபீசுக்கும் தினமணி ஆபீசுக்கும் அலைந்து கதிருக்கு வந்து சேருவதற்காக சாவியை பல முறை சந்தித்துப் பெரும் பாடுபட்டு கதிரில் சேர்த்து விட்டார். சாவி அவர்களுக்கு

ஆயிரம் ரூபாய் சம்பளம். தினமணி கதிரின் விற்பனை இப்பொழுது உள்ளதைக் காட்டிலும் உயர்த்திக் காட்ட வேண்டும் என்ற நிபந்தனையுடன் கதிர் ஆசிரியர் பொறுப்பை ஏற்றுக்கொண்டார். சாவி வந்து சேர்ந்து 3 மாதம் கழிந்தது. விற்பனையில் ஓஹோ என்று ஒரு மாறுதலும் இல்லை. எனவே 3 உதவியாளர்கள் வேண்டாம் உங்களுக்கு என்று நிர்வாகம் கூறிய தோடல்லாமல் 3 பேர்களில் யாரைக் குறைக்கவேண்டும் என்று நீங்களே முடிவு எடுத்து விவரம் அனுப்பும்படி கேட்டுக்கொண்டது நிர்வாகம். அதற்கு சாவி, யார் தான் தினமணி கதிரில் சேர்வதற்காகப் பலமுறை விகடன் ஆபீசுக்கும் தினமணி ஆபீசுக்கும் அலைந்தாரோ அந்த இளைஞர், இ. ராஜப்பாவை நீக்கிவிடும்படி நிர்வாகத்திற்கு எழுதி அனுப்பினார். இந்த விபரத்தைப் பகல் 1 மணிக்கு டிபன் சாப்பிட வந்த இ. ராஜப்பா என்னிடம் கூறினார். அவர் கூறியதைக் கேட்டதும் மனம் ரொம்பவும் வேதனைப்பட்டது. சாவியைப் பற்றி மணியன் எழுதியது எல்லாம் சரிதான் என எண்ணிக்கொண்டேன். நீங்கள் மட்டும் வருத்தப்படவில்லை. தினமணி மானேஜர் திரு.S.V. சாமி அவர்களே நீயே சாவியை இங்கு கொண்டு வந்தாய். அவர் உன்னையே வெளியே அனுப்பிவிட்டாரே என்று வருத்தப்பட்டதாகவும் சொல்லி ராஜப்பா என்னிடமிருந்து விடை பெற்றுக் கொண்டார். பின்னர் கலைமகள் இலக்கியப் பத்திரிக்கையில் சேர்ந்து விட்டார்.

சாவி அவர்கள் கதிர் ஆசிரியராக வருவதற்கு முன்பே முரசொலி தினமணி ஆபிசில் அச்சிடப்பட்டு வந்தது. முரசொலி காரியாலயம் ஆயிரம் விளக்கு பகுதியில் கட்டிடம் பழுதுபார்ப்பதாலோ ஏதோ தெரியவில்லை. இந்த சமயத்தில் தான் கலைஞரின் நெஞ்சுக்கு நீதி மலிவுப்பதிப்பாக வெளி வந்தது. 25 ரூபாய் விலைக்கு நல்ல விற்பனையானது. சாவி அவர்களுக்கும் கலைஞர் அவர்களுக்கும் நட்பு இறுகியது. கலைஞர் அவர்கள் அப்பொழுது முதல்வராக இருந்தார்.

தினமணியில் ஐராவதம் மகாதேவன் ஆசிரியராக இருந்ததாக நினைவு. பின் கலைஞரின் ஆட்சி கலைக்கப் பட்டது. அதைக் கண்டித்து ஐராவதம் மகாதேவன் அடாவடித்தனமான தீர்ப்பு என்று தலையங்கம் எழுதினார். சாவியின் பொறுப்பிலிருந்த கதிரில் *M.G.R.*ரைம் அண்ணா தி.மு.க.வையும் எதிர்த்தே எழுதி வந்தார் சாவி அவர்கள். அதைத் தம் கொள்கையாகவே கடைபிடித்து வந்தார். அப்பொழுது ஒரு விமான விபத்தில் பயணம் செய்தவர்களில் பலர் உயிர் இழந்தனர். அதில் சாவி அவர்களின் மருமகனும் உயிர் இழந்தார். இறந்தவர்களுக்கு விமான கம்பெனி நஷ்டஈடு கொடுத்தது. இதை தவிர கலைஞரும் விமான கம்பெனியிடமிருந்து மற்றொரு தொகை சாவிக்கு பெற்றுக் கொடுத்தாக ஒரு பேச்சு அடிபட்டது. அப்பொழுது மறுபடியும் தேர்தலில் *M.G.R.* கட்சி அமோக வெற்றி பெற்று ஆட்சியைப் பிடித்தது. *M.G.R.* மந்திரி சபை அமைக்கப்பட்டதும் கோட்டையிலிருந்து தினமணி அதிபர் பகவான்தாஸ் கோயங்கா அவர்களுக்கு ஒரு போனில் பேசியவர்; ஐயா, இவ்வளவு நாள் எங்கள் தலைவரையும் எங்களையும் திட்டித்திட்டி மட்டமான முறையில் கார்ட்டூனை உங்கள் பத்திரிகை தினமணி கதிர் எழுதியும், எதிர்த்தும் வந்தும்கூட நாங்கள் மக்கள் ஆதரவால் ஆட்சிக்கு வந்துவிட்டோம் என்று ஒரு அமைச்சர் சொல்லிவிட்டு எதிர்முனையிலிருந்து பதிலைக்கூட எதிர்பார்க்காமல் போனை வைத்துவிட்டாராம்.

அப்பொழுது ஏதோ ஒரு வெளிநாட்டுக்குப் பத்திரிக்கை யாளர் சார்பில் சாவி அழைக்கப்பட்டு போய் இருந்தாராம். அந்த நாட்டிற்கே டிரங்கால் மூலம் தினமணி கதிர் ஆசிரியர் பதவியை பறித்துவிட்டது கோயங்கா அவர்களின் நிர்வாகம். பத்திரிகை உலகின் இலங்கேஸ்வரனாக கொடிகட்டிப் பறந்தவர் திரு. ராம்நாத் கோயங்கா அவர்கள். *M.G.R.* நடித்த ஒரு படத்தில் நினைத்ததை நடத்தியே முடிப்பவன் நான் நான்

என்று ஒரு பாட்டு வரும், அது கோயங்கா அவர்களுக்கும் பொருந்தும். அறிஞர் அண்ணா அவர்கள் முதல்வராகப் பதவி ஏற்றுக்கொண்டு சில மாதங்கள் கழித்து ஒரு சிறிய பிரச்னை இந்தியன் எக்ஸ்பிரஸ் தினமணி இரண்டு பத்திரிகைகளின் போஸ்டர்களால் வந்தது. ஏதோ கல்லூரி சம்பந்தப்பட்ட விவகாரத்தில் மாணவர்களின் காலித்தனம் என்று தினமணி போஸ்டரிலும், பத்திரிகையின் உள்ளே செய்தியும் இதே மாதிரி எக்ஸ்பிரஸ்ஸிலும் வெளிவந்ததைப் படித்து சில மாணவர்கள் எதிர்ப்பு தெரிவிக்க, தினமணி இந்தியன் எக்ஸ்பிரஸ் காரியாலயம் நோக்கி வர ஆரம்பித்தனர். இந்தச் செய்தி அப்படியே எக்ஸ்பிரஸ் ஆபீசுக்கு எதிரில் உள்ள ஆர்ட்ஸ் காலேஜ் (இப்பொழுது காயிதே மில்லத் கல்லூரி என்று அழைக்கப்படுகிறது.) அங்கிருந்தும் மாணவர்கள் கூட்டம் வந்து சேரவும் வர வர கூட்டம் வேடிக்கை பார்ப்பவர்கள் கூட்டமும் சேர்ந்துகொண்டதும் எக்ஸ்பிரஸ் வாசல் இரும்பு கேட் மூடப்பட்டது. மாணவர்களுடன் மற்றும் வேடிக்கை பார்ப்பவர்களும் எழுப்பிய பத்திரிகைக்கும் முதலாளி கோயங்காவிற்கும் எதிரான கோஷங்கள் வர வர அதிகமானது. நிர்வாகம் போலீசின் துணை தேடியது. போலீசும் வந்தது துணைக்கு. சற்றுநேரத்தில் யாரும் சற்றும் எதிர்பாராதவிதமாக முதல்வரான அறிஞர் அண்ணா அவர்களே காரில் வந்துவிட்டார்கள். முதல்வர் வந்து விட்டார் என்ற செய்தி கோயங்கா அவர்களுக்கும் தெரிந்து திரு. ராம்நாத் கோயங்கா அவர்கள் அவசர அவசரமாக ஓடி வந்து கேட் வாசலைத் திறந்து அண்ணாவை வரவேற்றார். அண்ணா அவர்கள் ஒரு வேன் மீது நின்றபடியே உங்கள் வருத்தத்தைப் பத்திரிகை அதிபர் புரிந்துகொண்டு வருத்தம் தெரிவித்துவிட்டார். இனி இப்படி நேராது பார்த்துக் கொள்வதாக உறுதி கூறி இருக்கிறார். நீங்கள் தயவு செய்து கலைந்து செல்லுங்கள் என அன்பாகக் கூறியதும் திரு.

கோயங்கா அவர்களும் அதே வேனில் நின்றுகொண்டு தான் மிக வருந்துகிறேன் இனி இவ்வாறு நேராமல் பார்த்துக் கொள்கிறேன் என்று ஆங்கிலத்தில் கூறியதும் கூட்டம் கலைந்துவிட்டது. அண்ணா அவர்கள் தான், வருவதற்கு முன்பே காவல் அதிகாரியிடம் நடந்த விஷயத்தை நன்றாகக் கேட்டறிந்து கொண்டுதான் தினமணி ஆபீஸ் வாசலுக்கு வந்தார்.

★ ★ ★

சுப்பு அவர்களின் மறக்க முடியாத பலபாடல்களில் ஒன்று தாசி அபரஞ்சி என்ற ஜெமினியின் படத்தில் அபரஞ்சியின் (புஷ்பவல்லி) வேலைக்காரியாக (M.S. சுந்தரிபாய் உண்மையாகவே 20 வயதுதான்) நடிக்கிறார். வேலைக்காரி பாடுவதாக ஒரு பாடல்,

''வேலைக்கார கேலிப் புழப்பு வெளியே சொன்னா

வெக்கம் - அத நினச்சு நினச்சு துக்கம்'

அவன் வருவான் இவன் வருவான்

அவனுக்கெல்லாம் படுக்க பாய போடணும்

நித்தம் நித்தம் பார்த்து பார்த்து நெனப்பு வேற தோணுது

பத்தினி போல் வச்சுக்க ஒரு பாவி மவனும் காணோம்.

இன்னும் எவ்வளவோ பாடல்கள் எழுதியுள்ளார். அவர் ஜெமினியில் அகப்பட்டுக் கொள்ளாமல் இருந்திருந்தால் குன்றிலிட்ட தீபமாய் இருந்திருப்பார்.

குடத்தில் வைத்த அகல் விளக்காகி அந்திம காலத்தில் கஷ்டங்களுடன்தான் மறைந்தார். ஜெமினி ஸ்டுடியோ தொழிலாளர் டெக்னிஷியன்கள் கதை இலாகா எல்லாம் வெளியேற்றப் பட்டு ஒப்பந்த அடிப்படையில் அமர்த்தப்பட்டார்கள்.

அப்பொழுது வெளியில் வந்த கொத்தமங்கலம் சுப்புவிற்கு ஆதரவுக்கரம் நீட்டி தன்னுடைய படங்களில் வாய்ப்பளித்த

வர், நடிகர் திலகம் சிவாஜி அவர்கள்தான். பேராசிரியர் கல்கி அவர்கள் தலைமை தாங்கிய ஒரு கூட்டத்தில் கொத்தமங்களம் சுப்பு அவர்களின் காலக்ஷேபம் நடக்க ஏற்பாடு செய்திருந்தது. கல்கி அவர்கள் பேசி முடிக்கும் தருவாயில் இவ்வாறு கூறினார். 'அடுத்தபடியாக கொத்தமங்கலம் சுப்பு அவர்கள், காந்தி மகான் கதை சொல்லி அழுவார்' என்று கூறியதும் கூட்டத்தில் அனைவரும் மேடையிருந்தவர்களும் திரு. சுப்பு அவர்களும் சேர்ந்து சிரித்த சிரிப்பு அடங்க சில வினாடிகளா யின. ஏற்கனவே சுப்பு அவர்களின் காந்தி மகான் கதை கேட்டவர்களும் சுப்புவும் அழுது அப்படி உணர்ச்சிகரமாக சொல்வதைத் தான் கல்கி அவர்கள் ஹாஸ்யமாக குறிப்பிட்டார்.

1967 -ல் ஆட்சியைப் பிடித்த அண்ணா அவர்கள் முதல்வர் ஆனதும் ஆவடி காங்கிரஸ் மாநாடு கோபுரம் அவருக்கு நினைவிருந்திருக்க வேண்டும். ஜெமினி அதிபர் எஸ்.எஸ். வாசன் அவர்களை அழைத்து முதலாம் உலகத் தமிழ்மாநாடு சென்னையில் நடத்தப்போகிறேன். அதற்கு நம் தமிழ் நாட்டின் சிறப்புகளைச் சித்தரித்து ஒரு ஊர்வலம் நீங்கள்தான் நன்றாக நடத்தித் தரவேண்டும் என்று அன்புடன் கேட்டுக் கொண்டார். வாசன் அவர்கள் மகிழ்ச்சியுடன் ஒப்புக் கொண்டார். திரு.வாசன் இதில் தான் மட்டும் பெருமை அடைவதைவிட நம் சினிமா படத் தயாரிப்பாளர்களையும் சேர்த்துக் கொள்ள விரும்பி அப்பொழுது பிரபலமாய் இருந்த வாஹினி, *A.V.M.*, *R.M.*வீரப்பன், ஜுபிடர் சோமு இவர்களை எல்லாம் அழைத்து கலந்து பேசி எல்லோரும் ஒவ்வொரு தொகை கொடுக்க ஒப்புக்கொண்டார்கள். பெருமளவு வாசனும் நாகிரெட்டியாரும், *AVM* செட்டியாரும் பங்கேற்று தமிழர்களின் நாகரீகம் வீரம், கொடைத்தன்மை, விளையாட்டு போர்த்திறன் மற்றும் எல்லா கலைகளையும்; பாமர மக்களும் அறிஞர்களும், சகலதரப்பு மக்களும் பிரமாதமாகப் பாராட்டும் வகையில் ஊர்வலம் நடத்தினர்.

ஊர்வலத்தில் மாணவ மாணவிகளும் ஆயிரக்கணக்கில் பங்கேற்றனர். செந்தமிழ் நாட்டின் எல்லாப் பெருமை களையும் சுமந்து மவுண்ட் ரோட்டில் சென்றது. சென்னை நகர மக்களும் இதைக் காணவும் மகா நாட்டுக்கு வந்திருந்த வெளிநாட்டுத் தமிழர்களும் பெரு மகிழ்ச்சி அடைந்தார்கள். அறிஞர் அண்ணாவின் மகிழ்ச்சிக்கு அளவே இல்லை. ஊர்வலத்திற்குக் கலைஞர் கருணாநிதியின் பங்கும் இருந்தது. உலகத் தமிழ் மாநாடு வெற்றிகரமாக நிறைவு பெற்றதால் அதன் நினைவாக மெரினா கடற்கரையில் தமிழ்ச் சான்றோர் களுக்கு சிலைகள் அமைக்கப்பட்டது. ஒவ்வொரு சிலைக் கான செலவையும் ஒவ்வொரு பிரமுகர்கள் ஏற்றுக் கொண்டார்கள். திருவள்ளுவர் சிலையை சிவாஜிகணேசன், ஔவையார் சிலையை திரு.எஸ்.எஸ். வாசன் அவர்களும் ஏற்றுக்கொண்டனர்.

எஸ்.எஸ்.வாசன் நாகி ரெட்டி போன்றோர்க்கும் மற்ற சினிமா பிரமுகர்களுக்கும் முதல்வர் அண்ணா அவர்கள் ராஜாஜி மண்டபத்தில் விருந்தும், பாராட்டும் வழங்கி கௌரவப்படுத்தினார். அறிஞர் அண்ணாவின் பாராட்டு மழையில் முற்றிலும் நனைந்தவர் திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள்தான். பாராட்டுக்கு நன்றி தெரிவித்தார் எஸ்.எஸ்.வாசன் அவர்கள்.

★ ★ ★

இந்தியன் எக்ஸ்பிரஸ் தினமணி தொழிலாளர் போராட்டத் தினால் பத்திரிக்கை காரியலாயத்தைக் கதவடைப்பு செய்துவிட்டார் திரு.கோயங்கா அவர்கள். லேபர் கமிஷனரின் சமரச முயற்சி தோல்வி அடைந்தது. சில காலம் கழித்து சித்தூரிலிருந்து எக்ஸ்பிரசும் தினமணியும் வெளிவந்து கொண்டிருந்தன. நாங்கள் கேண்டீனை மூடிவிட்டோம். P.M.G. ஆபீசும், மவுண்ட் ரோடு புதிய கட்டிடத்தில் இயங்கியது.

*A.G.S.* ஆபீசும் தேனாம்பேட்டையில் புதிய கட்டிடத்தில் இயங்கியது. எனவே எங்களுக்கு வியாபாரம் இல்லாததால் நாங்களும் மூடிவிட்டு வெளியில் வியாபாரத்துக்கு (இதே ஓட்டலுக்கு) இடம் தேடிக்கொண்டிருந்த சமயம் எங்கள் வீட்டுக்குப் பக்கத்து வீட்டுக்காரர் சொன்னார். கிண்டியில் ரயில் நிலையம் அருகில் ஒரு சாய் பாபா கோவில் இருக்கிறது. அதை லோகனாத முதலியார் என்ற பெரியவர் பார்த்துக் கொண்டிருக்கிறார். அவருக்கு அந்தப் பகுதியில் நிறைய காலி இடங்கள் இருக்கின்றன. அவரைப் போய் பாருங்கள் உங்கள் இடம் ஓட்டலுக்குள் கிடைக்கும் என்றார்.

நானும் என் சகோதரரும் மறுநாள் காலை 8 மணிக்கு ஆலந்தூர் பஸ்ஸில் ஏறி கத்திப்பாரா என்ற பஸ் ஸ்டாப்பிங்கில் இறங்கினோம். அதன் அருகில் ரயிலடியும் சாய்பாபா கோவிலும் இருந்தது. கோவிலில் வாசல்படியில் இருவரும் உட்கார்ந்தோம். அப்பொழுது சுமார் 50 வயது மதிக்கக் கூடிய ஒரு பெரியவர் வந்து எங்களைப் பார்த்து கோவிலுக்கா வந்திருக்கிறீர்கள்? உள்ளே போய் பாபாவைப் பாருங்கள் என்றார். ஆமாம் நாங்கள் சாய் பாபாவையும் உங்களையும் பார்க்கத்தான் வந்தோம் என்று சொல்லிவிட்டு முதலில் பாபாவை தரிசனம் (ஷீரடி சாய் பாபா) செய்துவிட்டு அவரிடம் விஷயத்தைச் சொன்னோம். அவரும் சாய்வு நாற்காலியில் அமர்ந்தபடி எல்லாவற்றையும் கேட்டுக் கொண்டார். அங்கிருந்த ஒரு பெண்மணி 40 வயதுக்குள் இருக்கும் ஏதோ வேலை செய்து கொண்டிருந்தவர்; கமலா என்று கூப்பிட்டு எங்களைச் சுட்டிக்காட்டி ஐயர் பாக்டரி பக்கத்தில் இருக்கும் இடத்தை இவர்களை அழைத்துக் கொண்டு போய்க் காண்பித்து வா என்றார். எனக்கும் சகோதரருக்கும் ரொம்ப சந்தோஷம். பெரியவர்தான் என்று மனதில் வாழ்த்திக் கொண்டே அந்த பெண்மணியுடன் போனோம். அது ஆலந்தூருக்குத் திரும்பும் வழியில் முதலில்

இருந்தது. நீண்ட ஹால், பின் பக்கம் முழுதும் அதே மாதிரி காடிகானாவைப் போல் இருந்தது. ஆனால் ரோடிலிருந்து சுமார் 100 அடி தள்ளி இருந்தது. அப்பொழுது அங்கே கிண்டி தொழில்பேட்டை உருவாகிக் கொண்டிருந்தது.

காமராஜ் முதல்வர். இவருக்குத் துணைவராக சுப்ரமணியம், பக்தவத்சலம், R.வெங்கட்ராமன் போன்ற கடமை, கண்ணியம், கட்டுப்பாடு மூன்றும் ஒருங்கே நிறைந்த மக்கள் நலத்தில் உண்மையான அக்கறை உள்ள மந்திரிகள் ஆண்டு கொண்டிருந்த காலம். இந்த இண்டஸ்ட்டிரியல் எஸ்டேட் அங்கு வந்ததினால் வெறும் குதிரைப் பந்தய சூதாடிகள் மட்டுமே அறிந்திருந்த கிண்டி எல்லோருக்கும் தெரிந்த இடமாய் தொழில் பேட்டை ஆனது. அதற்கு காரணம் காமராஜ் மந்திரிசபையில் இருந்த R. வெங்கட்ராமன்தான். இடத்தைப் பார்த்துவிட்டு லோகனாத முதலியாரிடம் வந்தோம். இடம் பிடித்து இருக்கு சார், வாடகை அட்வான்ஸ் எவ்வளவு வேண்டும் என்று கேட்டோம். அதற்கு இந்த பெரியவர் (வயதிலும் மட்டுமல்ல, மனதிலும் மிகப் பெரியவர்) சொன்னார். தம்பி எனக்கு அட்வான்ஸ் எதுவும் வேண்டாம். உங்களால் அந்த இடத்தில் ஓட்டல் நடத்த முடியுமா? என்று கேட்டார். முடியும் என்று என் சகோதரர் கூறினார். சரி அப்படியானால் தினசரி 5 ரூபாய் வாடகையைக் கொடுத்து விடுங்கள். அட்வான்சும் தேவை இல்லை. மாத வாடகை வேண்டாம். தினசரி 5 ரூபாய் என்றால் மாதம் 150 ரூபாய் ஆகிறது. அதை தினசரி 5 ரூபாய் வீதம் கொடுத்து விடுங்கள். ஓட்டலுக்கு ஏற்றபடி இடத்தை உங்கள் சௌகரியப்படி உங்கள் செலவில் நீங்களே செய்து கொள்ளுங்கள் என்று கூறிவிட்டார். எங்களுக்கு ரொம்ப சந்தோஷம். ஏனென்றால் அவ்வளவு இடத்திற்கு 500 ரூபாய்க்கு குறைந்து வாடகைக்கு நிச்சயம் கிடைக்காது. அந்தப் பெரியவர் வக்கீல் தொழில் நடத்தி வந்தவராம்.

இப்பொழுது தான் மட்டும் அங்கே இருக்கிறார். குடும்பம் வெவ்வேறு இடத்தில் வசதியாக இருக்கிறார்கள்.

தினமணி ஆபீஸில் கேன்டீன் நடத்தி சுமார் 10,000 ரூபாய் வரை சம்பாதித்து பேங்கில் போட்டிருந்தோம். 5 ஆயிரம் எடுத்து எல்லாச் சாமான்களும் புத்தம் புதியதாக ஆர்டர் கொடுத்து வேலைக்கு ஆட்களும் ஏற்பாடு செய்து 1960 ஜூன் மாதம் 1 தேதி விக்னேஸ்வர பவன் என்ற பெயருடன் ஓட்டலை திறந்தோம். 2000 நோட்டீஸ் அடித்து இண்டஸ்டிரியல் எஸ்டேட் முழுவதும் கொடுத்தோம். கத்திப்பாரா என்ற பெயர் உள்ள இடத்தில், தொழில் பேட்டைக்கு எதிர்ப் பக்கம் இருக்கும் மீனம்பாக்கம் விமான நிலையத்திலிருந்தோ அல்லது அதற்கு அப்பாலிருந்தோ பஸ்சிலும், காரிலும் சைக்கிளிலும் நடந்தும் வருபவர் கண்ணில் பார்வையில் எங்கள் விக்னேஸ்வர பவன் படாமல் தப்ப முடியாது. எங்கள் எதிர்பார்ப்பைவிட வியாபாரம் இருமடங்கு நடந்தது. நாங்கள் எதிர்பார்த்தது 200 -லிருந்து 300 வரைதான். ஆனால் 550-லிருந்து 600 வரை நடந்தது. தினமணிக்குக் கேன்டீனில் 6 பேர்கள் மட்டுமே வேலைக்கு இருந்தார்கள். இந்த கடைக்கு மொத்தம் 22 பேர்கள். எல்லோருக்கும் வாரச் சம்பளம். இரண்டு சமையல்காரர்களுக்கு மட்டும் மாதச் சம்பளம். எல்லாருக்கும் தினசரி நான்கு அணா. இதற்கு அந்த காலத்தில் எண்ணெய் தேய்த்துக் குளிப்பதற்காகவும், மற்ற சில்லறை செலவு களுக்காகவும் எல்லா ஓட்டல்களிலும் கொடுப்பது வழக்கம்.

1961 -ஆம் ஆண்டு விலைவாசிபடி எங்கள் ஓட்டலின் விலைகளை உள்ளபடி எழுதியிருக்கிறேன்.

அளவு சாப்பாடு 37 பைசா (அதாவது 6 அணா) சாப்பாடு வாழை இலையில்தான். 1 பொரியல், 1 கூட்டு, 1 பச்சடி, 1 அப்பளம், சாம்பார், ரசம், மோர், ஊறுகாய்

மற்ற விலைகள்

கப் காபி 12 காசு, தோசை 12 காசு பூரிகிழங்கு 12 காசு, பொங்கல் 12 காசு, மசால் தோசை 15 காசு, இட்லி 5 காசு, வடை5 காசு.

ஒவ்வொரு வெள்ளிக்கிழமையும் தவறாமல் 1 கப் பாயாசம் (சாதம், பாயசம் தவிர மற்ற வகைகள் தாராளமாக வழங்கப்படும்) இந்த அளவுச் சாப்பாடு சாப்பிடுபவர்கள் முதலில் காசை கொடுத்து டோக்கன் பெற்றுக்கொள்ள வேண்டும். டோக்கன் பெற்றுக் கொண்டவர்கள், சாப்பிடுப வர் ரசம் அல்லது மோர் சாதம் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் போதே டோக்கனை டேபிளில் வைத்து இடம் பிடித்து விடுவார்கள். ஒரே சமயத்தில் 46 பேர்கள் சாப்பிடும் அளவுக்கு டேபிள்கள் இருக்கும். தினசரி காலை 8 மணி அல்லது எட்டரை மணிக்கு கடை முழுவதும் நிரம்பிவிடும். அப் பொழுது வாசல் இரும்பு கேட்டை சாத்தி விடுவோம். பின் 10 நிமிடங்கள் பொருத்து கேட்டை திறந்துவிடுவோம். இதே போல் பகல் 1 மணியிலிருந்து 2 மணிக்குள் ஒரு ஹவுஸ் புல்லாகும்.

சைதாப்பேட்டையிலிருந்தும், மீனம்பாக்கத்திலிருந்தும், ஆலந்தூர் பட்ரோட் இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்டிலிருந்தும் எங்கள் கடைக்கு வாடிக்கையாளர்கள் உண்டு. இண்டஸ்ட்டிரி யஸ் எஸ்டேட்டிலும் ஒரு கேண்டீன் தனியார் ஒருவர் நடத்தி வந்தார். அதனால் எங்களுக்குப் பாதிப்பு ஒன்றுமில்லை. இந்த சமயத்தில் இங்கிலாந்து ராணி எலிசபெத்தும் அவர் கணவர் பிலிப்ஸ் கோமகனும் இந்தியாவிற்கு விஜயம் செய்தார்கள். அவர்கள் சென்னைக்கும் வந்தார்கள். அப்பொழுது காங்கிரஸ் ஆட்சி நடந்துகொண்டிருந்தது. காங்கிரசில் ஈடு இணை இல்லாத தலைவர் திரு. காமராஜர் அவர்கள் முதலமைச்சராக இருந்து ராஜ குடும்பத்திற்கு ராஜாஜி மண்டபத்தில் சிறப்பான வரவேற்பும், விருந்தும், கொடுத்தார். ராணியையும், கணவர் குடும்பத்தினர்களையும் பார்க்க தமிழ்நாடு முழுவதிலிருந்தும் மக்கள் வந்த வண்ணம் இருந்தார்கள். ராஜ குடும்பத்தினர்

திரும்பிப் போகும்வரை சென்னையில் எந்த ஓட்டல்களிலும் தங்குவதற்கும் இடம் கிடைக்கவில்லை. எல்லா ஓட்டல் களுக்கும், டீ கடைகளுக்கும் தினசரி நடக்கும் வியாபாரம் போல் மூன்று பங்கு அதிகமாக நடந்தது. என் கடை வாசலிலிருந்தே மிக்க அருகில் ராணியையும் கணவரையும் முதல் அமைச்சர் காமராஜரும் ஒரே திறந்த காரில் ஊர்வலம் மாதிரி வந்து மக்களுக்கு தரிசனம் அளித்த அந்த நாளை மக்கள் மறக்கவே மாட்டார்கள்.

கிண்டி தொழிற்பேட்டையை கம்யூனிஸ்ட் கட்சியின் தலைவர்கள் படை எடுக்க ஆரம்பித்துவிட்டார்கள். தொழில் கள் ஆரம்பம் ஆவதற்கு முன்னால் இவர்கள் (தொழிற்சங்கம்) யூனியன் ஆரம்பித்து விட்டார்கள். கம்யூனிஸ்ட் கட்சியும் காங்கிரஸ் கட்சியும்தான் முழு அரசியல் அறிவு படைத்தவர் களாக ஒரு காலத்தில் திகழ்ந்தார்கள். அவர்களுடைய தொண்டு தன்னலமற்றதாக இருந்தது. பின்னர் இரு கட்சிகளும் மாநிலக்கட்சிகளுடன் கூட்டு சேர்ந்த பின்னர் இரண்டும் தன் கொள்கைகளை மாற்றிக்கொண்டன. கம்யூனிஸ்ட்களிடம் எனக்கு எனக்கென்ன, அறிவுடையவர் களுக்கெல்லாம் பிடித்த விஷயம் இது. எவ்வளவு பெரிய உலகத் தலைவர்களாக இருந்தாலும் சரி காம்ரேட் (அ) தோழர் - என்று சொல்லித்தான் குறிப்பிட்டுப் பேசுவார்கள். எழுதுவார்கள். இந்தப் பண்பு வேறு எந்தக்கட்சியிலும் காணமுடியாத பேருண்மை. என் கடைக்கு (கம்) தலைவர் ஜீவானந்தம் வருவார். அவருடன்கூட குறைந்த பட்சம் 4 தொண்டர்கள் வருவார்கள். என் கடையில் சிற்றுண்டி சாப்பிடுவார்கள். இவரைச் சேர்ந்து மொத்தம் ஐந்து பேர்களுடைய பில்லுக்கும் இவர்தான் பணம் கொடுப்பார். மற்றவர்களைக் கொடுக்கவே விடமாட்டார். இதே போல் பல முறை என் கடைக்கு வந்திருக்கிறார். அவருடைய பெருந் தன்மை, பேச்சாற்றல், நினைவாற்றல், அவர் பாரதியாரையும்

கம்பரையும் பற்றி பேசினால் கேட்பவர் தன்னை மறந்து கேட்டு கொண்டிருப்பதை நானே நேரில் அனுபவித்திருக்கிறேன். தோழர் ஜீவானந்தம் அவர்களைப் பேராசிரியர் கல்கி அவர்கள் அட்டையில் போட்டு இவருடைய பேச்சாற்றலைக் குறித்து ஒரு குறிப்பு எழுதினார். ஜீவா அப்பொழுது தி.க.வில் இருந்தார். இவருடைய நாஸ்திக வாதத்தைக் கேட்ட பரமசிவனுக்கே சந்தேகம் வந்து நாம் இருக்கிறோமா என்று தன்னைத் தானே கிள்ளிப் பார்த்துக் கொள்வாராம் என்று எழுதி உள்ளார் பேராசிரியர் கல்கி அவர்கள்.

எங்கள் கடை ஒரு வருடம்தான் நன்றாக நடந்தது. போட்ட முதல் 5000 ரூபாய் எடுத்துவிட்டோம். இனி சம்பாதிக்கும் வேளையில் இண்டஸ்ட்ரியஸ் எஸ்டேட் தொழிற்சாலைகளில் எல்லாம் செங்கொடி பறக்க ஆரம்பித்துவிட்டது. அது எங்கள் கடையிலும் ஒளி வீச ஆரம்பித்து ஒரே வருடத்தில் எங்கள் தொழிலாளர்க்கு யூனியனில் சேர என்ன அவசரமோ தெரியவில்லை. நாங்கள் எங்கள் வியாபாரத்திற்கும் அவர்கள் வேலைக்கும் தகுந்த மாதிரி சம்பளம் கொடுத்துவந்தோம். முதல் வருடம் எங்களுக்கு லாபம் இல்லை. ஆனால் வேலை செய்த 22 பேர்களுக்கும் 1 மாத சம்பளம் தீபாவளி அன்று போனஸ் கொடுத்தோம்.

இம்மாதிரி சூழ்நிலையில் ஒரு நாள் ஜெமினி ஸ்டுடியோவிலிருந்து மெஸ்சில் கணக்கெழுதிக்கொண்டிருந்த கோபால கிருஷ்ணன் என்னைப் பார்க்க வந்தார். அவர் என்னிடம் சொன்ன விவரங்கள் என்னைப் பாதித்தது. அவர் சொன்னது இவைதான்.

ஜெமினி ஸ்டுடியோ யூனியனில் மெஸ் டிபார்ட்மென்டும் சேர்ந்தது. ஐய்யருக்கு மன வேதனை கொடுத்தோம். மெஸ்சில் வேலை செய்பவர்களுக்கு எந்தக் குறையும் இல்லை. மற்ற சிப்பந்திகளுக்குள்ள எல்லா சலுகைகளும்

கொடுத்து வந்தேன். அவர்களே யுனியன்களுக்குள் சேர்ந்தது ஆச்சரியமாக இருக்கிறது. என்றாலும், திரு. வாசன் அவர்கள் மற்றபடி தொழிலாளர்கள் எல்லாரையும் ஒப்பந்தக் கூலிகளாக மாற்றி அமைத்துவிட்டு, மெஸ்சும் தேவை இல்லை என்று மூடிவிட்டு, எவரேனும் டிபனும் காபியும் கொடுத்தால் போதும் இதற்காக ஒரு டிபார்ட்மெண்ட் தேவை இல்லை. ஷூட்டிங் சம்பந்தப்பட்டவர்களுக்கு மட்டும் சாப்பாடு தேவையானால் வெளி ஓட்டல்களில் வாங்கிக் கொள்ளலாம் என முடிவு செய்து, முதன் முதலில் ஜெமினி மெஸ் என்று அழைக்கப்பெற்ற இலாகா மூடப்பட்டது. மெஸ்சில் வேலை செய்த 38 பேர்களுக்கு அன்றைய தொழில் சட்டப்படி 1 மாத நோட்டீஸுக்கு பின் சம்பளம் கணக்குத் தீர்த்துக் கொடுக்கப்பட்டது. பின்னர் மெஸ்சில் வேலை செய்த கோபாலகிருஷ்ணன் என்பவரை எஸ்.எஸ். வாசன் அவர்கள் மெஸ்ஸில் டிபன் காபி மட்டும் போட்டு நடத்து. அதில் வரும் லாபம் நஷ்டம் நீயே எடுத்துக்கொள். நீ இதே இடத்தில் நடத்தலாம். இந்தப் பாத்திரங்களையே உபயோகப்படுத்திக் கொள் என்று கூறினார். கோபாலகிருஷ்ணனும் ஒப்புக் கொண்டு நான்கு பேரை மட்டும் வேலைக்கு வைத்துக் கொண்டார். 6 மாத காலம் மெஸ்சை நடத்தினார். வரவுக்கும் செலவுக்கும் எங்கோ போய்விட்டது. சுமார் 3 ஆயிரம் வரை நஷ்டம். எனவே மெஸ்சை இந்த வருடம் ஏப்ரல் மாதத்துடன் மூடிவிடப் போகிறேன். ஆகையால் ஐயருக்கு ஒரு கடிதம் நீதான் எழுதி கொடுக்க வேண்டும். ஏப்ரல் மாதத்துடன் என் வியாபாரத்தை முடித்துக் கொள்வதாக எழுதிக் கொடு என்று கேட்டார். நான் மிக்க வேதனை அடைந்தேன். கோபால கிருஷ்ணன் முகத்தைப் பார்க்கவே எனக்கு கஷ்டமாக இருந்தது. சரி என்றுச் சொல்லிவிட்டு, ஒரு வெள்ளைத்தாளில் எழுதிக்கொடுத்தேன்.

மரியாதைக்குரிய முதலாளி அவர்களுக்கு, வணக்கமாய் எழுதிக் கொள்வது. ஸார் யானை கட்டித் தீனிபோட்ட இந்த மெஸ்சை நான் நடத்த நினைத்ததே தப்பு சார். என்னால் முடியவில்லை. எனவே இந்த மாதத்துடன் நான் மூடிவிடு கிறேன். தயவு செய்து என்னை விடுவிக்கும்படி கேட்டுக் கொள்கிறேன்.

வெறும் யானையாக இல்லை. யூனியன் என்ற மதம் பிடித்த யானை சார் இது. எத்தனை பாகன்களாலும் முடியாது சார்.

உங்கள் ஆதரவிற்கு நன்றி.

*T.* கோபாலகிருஷ்ணன்.

மேல்படி கடிதம் பெற்றுக்கொண்ட கோபாலகிருஷ்ணன் சென்றுவிட்டார். இரண்டு நாள் நான் கல்லாபெட்டியில் உட்கார்ந்திருக்கிறேன். மாலை 5 மணி இருக்கும் சுப்பாமணி சௌக்யமா இருக்கியா என்று கேட்டபடியே ஒல்லியாக ஒருவர் என்னை பார்த்துக் கொண்டே ஓட்டலுக்கு நுழைந்தார். நான் அவரைப் பார்த்ததும் தெரிந்து கொண்டேன். வாருங்கள். வாருங்கள் ராமமூர்த்தி என்று சொல்லியபடி எப்படி இருக்கிறீர்கள். சௌக்கியமா வீட்டில் எல்லோரும் நலமா? என்று கேட்டு, அருகில் இருந்த டேபிளில் உட்காரச் சொல்லி அந்த டேபிள் சர்வரிடம் அவருக்கு டிபன் முதலில் ஏதாவது ஸ்வீட் கொடுக்கும்படி கூறினேன். அவரும் முகம் மலர்ந்து, டிபன், காபி எல்லாம் சாப்பிட்டு என் அருகில் வந்தார். எனக்கு பக்கத்தில் கல்லாப்பெட்டி அருகில் ஒரு சேரை போட்டு உட்காரவைத்தேன். இருவரும் பேசலானோம். இவர் பெயர் கீ. ராமமூர்த்தி என்பது ஜெமினி ஸ்டுடியோவில் ஜெனரல் ஆபீசில் குமாஸ்தாவாக பணிபுரிகிறார். இவர் என்னுடைய ஆத்மார்த்தமான நண்பர். இவருக்கும் எனக்கும் நட்பு ஏற்படக்காரணமானவர் இவருடைய நண்பர் *P.V.S.* மணி என்பவர். இவர் ஜெமினி ஸ்டுடியோவில் புரோகிராம் ஆபீசில்

வேலை செய்கிறார். இந்த *P.V.S.* மணியும் எனக்கு இவரைப் போலவே மிக ஆத்மார்த்தமான நண்பர். இவர்கள் இருவரும் திருமணமாகி குழந்தைகளுடன் இருக்கும் குடும்பஸ்தர்கள். இருவர்க்கும் மைலாப்பூரில்தான் வெவ்வேறு தெருக்களில் வீடு. இருவருடைய வீட்டிற்கு என்னை (பிரம்மசாரி) அழைத்து பல வேளைகளில் எனக்கு (டியூட்டி இல்லாத நேரங்களில்) சாப்பாடு போட்டிருக்கின்றனர். நான் பிரம்மச் சாரி ஆதலால் என் சம்பளத்தில் குடும்பச் செலவு ஒன்றும் இல்லை. என் செலவு சினிமா பார்ப்பது மட்டும்தான். நான் சொந்தமாக கடை திறக்கவேண்டும் என்ற எண்ணத்தில் என் சம்பளத்தைப் பேங்கில் போட்டு என் கணக்கில் இருந்தது. இந்த விவரம் இவர்களுக்கும் தெரிந்திருந்தது. சில சமயங்களில் இருவருமே என்னிடம் 20,750 ரூபாய் வரை கைமாற்று வாங்கி முதல் தேதி சம்பளம் வாங்கியதும் திருப்பிக் கொடுத்துவிடுவார்கள். இதில் *P.V.S.* மணி என்பவர் உடனுக்குடன் கொடுத்துவிடுவார். இந்த ராமமூர்த்தியால் அப்படி உடனுக்குடன் கொடுக்க முடியவில்லை. எனக்கும் பணமுடை இல்லாததால் பாவம் குடும்பஸ்தன் மெதுவாகக் கொடுக்கட்டுமே என்று இருந்துவிட்டேன். நான் என் டைரியைப் பார்த்து இவருக்கு கொடுத்ததைக் கூட்டிப் பார்த்தேன் 1644.00 பாக்கி இருந்தது. நான் ஒரு தீர்மானம் செய்து கொண்டேன். இவருக்கு இனி பணம் கொடுக்க வேண்டாம், இந்த ரூபாய் வரும்பொழுது வரட்டும் என்று மனதிற்குள் முடிவு செய்துகொண்டேன்.

ஜெமினி ஸ்டுடியோவிலிருந்து தினமணி ஆபீஸ் கேண் டீனுக்காக வேலையை விட்டு வந்தபொழுது எல்லா முக்கியமான நண்பர்களிடமும் இவரிடமும் *P.V.S.* இடமும் சொல்லி விடைபெற்று கொண்டபோது இவரைப் பார்த்ததுதான். பின்னர் பல ஆண்டுகள் மறந்து விட்டேன். இப்பொழுது பார்த்தேன். என்ன விசேஷம் என்று கேட்டேன்.

அவர் சொன்னார் சுப்பாமணி நீ எனக்கு எவ்வளவு உதவி செய்திருக்கிறாய். இதை எல்லாம் எப்படி திருப்புவது.

என் சம்பளத்தில் முடியாது போல் தோன்றுகிறது. என் பையன் படிப்பு முடித்து வேலைக்கு போய் சம்பாதிக்க ஆரம்பித்ததும், உன் கடனைத்தான் முதலில் அடைப்பேன். நீ என்னைத் தவறாக நினைக்காமல் இருந்தால் சொல்றேன் என்றார். நான் எதுவும் எதற்கும் தவறாக நினைக்க மாட்டேன், தைரியமாகச் சொல்லுங்கள் சார் என்றேன். சுப்பாமணி என் வீட்டுக்காரனுக்கு மூன்று மாத வாடகை பாக்கி மொத்தம் 90 ரூபாய். எப்படியாவது நீ கொடுத்து உதவி செய். ஏற்கனவே நிறைய செய்திருக்கிறாய். இதையும் நீதான் செய்ய முடியும். வேறு யாரும் எனக்குப் புகலிடம் கொடுக்கமாட்டார்கள் என்று அழாத குறையாகக் கூறி நிறுத்தினார்.

நீ கொடுக்காவிட்டால் வீட்டுப் பாத்திரங்களை எல்லாம் எடுத்துத் தெருவில் வைத்துவிடுவதாக சொல்லி இன்று மாலைவரை கெடு வைத்திருக்கிறான் என்று அவர் சொன்னதைக் கேட்டு எனக்கு மனம் ரொம்பவும் சங்கடப் பட்டது. நான் சற்று நேரம் யோசித்தேன். பிறகு கல்லாவைத் திறந்து 100 ரூ நோட்டு ஒன்றை எடுத்து அவரிடம் கொடுத்துவிட்டு செலவு கணக்குப் புஸ்தகத்தில் என் பெயருக்கு 100 ரூபாய் என்று எழுதிக்கொண்டேன்.

அதைப்பெற்ற அவர் முகம், மலர்ந்தது. ரொம்ப நன்றி சுப்பாமணி. போன ஜென்மத்தில் நீ என் தம்பியாகவோ, அண்ணனாகவோ இருந்திருப்பாய் என்று சொல்லிவிட்டு விடைபெற்றுக் கொண்டு இரண்டடி நடந்தவர் உடன் திரும்பி வந்து சுப்பாமணி உனக்குத் தெரியுமா. கோபாலகிருஷ்ணன் இந்த மாதத்துடன் மெஸ்சை மூடிவிடப் போகிறார். நீ எடுத்து நடத்துகிறாயா? நான் P.V.S. மணியிடம் சொல்லி ஏற்பாடு செய்கிறேன் என்றார். நான் ஒன்றும் பேசாமல் இருந்தேன். மௌனமாக இவர் இப்படி சொல்லிக்கொண்டிருந்தபொழுது

என் சகோதரர் வீட்டிலிருந்து கடைக்கு சந்தித்தார்கள். ஏற்கனவே என் சகோதரரை ராமமூர்த்திக்குத் தெரிந்தபடியால் இருவரும் யோகக்ஷேமங்களை ஒருவருக்கொருவர் விசாரித்துக் கொண்டார்கள். ராமமூர்த்தி என் சகோதரரிடமும் ஜெமினி மெஸ் மூடப்பட்டது, நீங்கள் நடத்துங்கள், நான் புரோகிராம் *P.V.S.* மணியிடம் சொல்கிறேன்; என்று சொல்லி எங்களிடம் விடை பெற்றுச் சென்றுவிட்டார்.

நான் கோபாலகிருஷ்ணனுக்கு மெஸ் சம்பந்தமாக கடிதம் எழுதி கொடுத்ததைப் பற்றி என் சகோதரரிடமும் சொல்லவில்லை. ராமமூர்த்தியிடமும் சொல்லவில்லை. ஏனோ எனக்கு இருவரிடமும் சொல்லத் தோன்றவில்லை. மறுநாள் காலை சுமார் 11 மணி இருக்கும். ஜெமினி ஸ்டூடியோவைச் சேர்ந்த வேன் ஒன்று எங்கள் கடை வாசலில் வந்து நின்றது. அதிலிருந்து எனக்குத் தெரிந்த டிரைவர் பாலகிருஷ்ணன் நம்பியார் இறங்கி வந்தபடியே என்னைப் பார்த்து சுப்பாமணி புரோக்கிராம் *P.V.S.* மணி உன்னை கையுடன் அழைத்துவர சொல்லி என்னை அனுப்பி இருக்கிறார். புறப்படு அங்கு உன் வேலை முடிந்ததும் இங்கேயே டிராப் செய்து விடுகிறேன் என்றார். நான் நம்பியாருக்கு டிபன் கொடுக்கச் சொல்லி என் சகோதரரைக் கேட்டேன். சரி நீயே போய் பார்த்து விட்டு மெஸ்சை நடத்துவதாக சொல் மற்ற விவரங்களை நாம் இருவரும் போய் பேசி முடிவு செய்வோம் என்று சொல்லி என்னை ஜெமினி ஸ்டூடியோ வேனில் அனுப்பிவிட்டார்.

ஏற்கனவே கோபாலகிருஷ்ணனுக்கு மெஸ்சில் நஷ்டம் என்றும் தன்னால் நடத்த முடியாதென்றும் கடிதம் எழுதிக்கொடுத்தேன். இப்பொழுது நானே அந்த நஷ்டம் வந்து கடனாளியாக்கிய மெஸ்சை நடத்தலாம் என்று ஏன் முடிவு செய்தேன்? விடை - ''சில நேரங்களில் சில மனிதர்கள்.''

பின்னர் காரியங்கள் எக்ஸ்பிரஸ் வேகத்தில் நடந்தது. உயர் திரு.எஸ்.எஸ். வாசன் அவர்களும் என் சகோதரர் *A.N.* ஸ்ரீனிவாசன் அவர்களும் சேர்ந்து 4 பத்திரப்பதிவு தாள்களில் ஒப்பந்தம் டைப் அடிக்கப்பட்டு இருவரும் கை எழுத்திட்டு ஒப்புக் கொண்டார்கள்.

எஸ்.எஸ். வாசன் அறையில் என்னையும் சகோதரரையும் அமரும்படி சொன்னார். நான் உட்காரவில்லை. எவ்வளவு பெரிய மனிதர், கோடீஸ்வரர்! அவரிடமே 11 ஆண்டு காலம் வேலை செய்து அவருக்கெதிரில் நாற்காலியில் உட்கார என் மனமும் நான் படித்த புத்தகங்களினால் கிடைத்த அறிவும் தடுத்தது. என் சகோதரரை உட்காரச் சொன்னார் திரு. வாசன் அவர்கள். சகோதரர் உட்கார்ந்தார்.

நான் இரண்டே விஷயம் கேட்டுக்கொண்டேன். மெஸ்சில் சாப்பாடும் நானே போடுகிறேன். டிபன் காபியும் இன்னும் உங்களுக்குத் தேவையானதை செய்து தருகிறேன் என்பது ஜெமினி ஸ்டூடியோ சிப்பந்திகள் தொழிலாளர்கள் இவர்களுக்கு டோக்கன் புக் குறைந்த பட்சம் 500 (ஐந்து ரூபாய்) எவ்வளவு வேண்டுமோ வாங்கி கொள்ளட்டும். இதை நான் வசூல் செய்வது கஷ்டம் ஆகையால் இதை வாங்குபவர்களின் சம்பளத்தில் பிடித்து நீங்களே எனக்குத் தரவேண்டும். இது இரண்டாவது கோரிக்கை. இரண்டையும் வாசன் அவர்கள் ஒப்புக்கொண்டு தலைமை கணக்கர் *A.R.* ராமமூர்த்தியிடம் சொல்லிவிட்டார். ஒப்பந்தம் கை எழுத்தாயிற்று. ஒரு வாரத்திற்குள் மெஸ்சை திறந்துவிடுவ தாகச் சொல்லி விடைபெற்றுக் கொண்டேன். எங்கள் விக்னேஸ்வர பவன் ஊழியர்களால் யூனியன் துவக்கப்பட்ட தால் அதுவும் கடை திறந்து 1 வருடம் கூட ஆகவில்லை. அதனால் என் சகோதரர் மனம் உடைந்து போய் விக்னேஸ்வர பவன் ஓட்டலைக் கட்டிட உரிமையாளர் திரு. லோக முதலியாரின் அனுமதியைப் பெற்று தி.நகர் ரங்கநாதன்

தெருவில் இருந்த பட்ஸ் ஹோட்டல் உறவினர் ஒருவருக்கு (கிருஷ்ணா உபத்யாய்) எல்லா சாமான்களுடன் எட்டாயிரம் (8000) ரூபாய்க்கு விற்றுவிட்டோம். அந்த ஓட்டலை நாங்கள் விற்காமல் இருந்திருந்தால் இன்று கோட்டீஸ்வரர்கள். ஆம்! எங்கள் விக்னேஸ்வர பவன் இன்று உடுப்பி தூர்கா கபேயாக காட்சியளித்துக் கொண்டு இன்னும் இருக்கிறது. கத்தி பாராமுனையில். என்ன செய்வது!

முன்பு ஜெமினி ஸ்டூடியோ மெஸ்சில் 11 ஆண்டுகள் வேலை செய்து பிறகு சொந்தமான தொழிலை முன்னிட்டு வேலையை விட்டேன். இப்பொழுது மெஸ் முதலாளியாக வந்திருக்கிறேன். மெஸ் கட்டிடம் மட்டும் பழையபடியே இருக்கிறது. ஐயர் ரூம் என்பதும்? அதில் 6 பேர்கள் சாப்பிடலாம். 15 பேர் டிபன் சாப்பிடலாம். ஆனால் (ஐயா எஸ்.எஸ். வாசன்) அவர்கள் மெஸ் பக்கமே வருவதில்லை அவருக்குச் சாப்பாடும் வீட்டில்தான். டிபன் காபி மட்டும்தான் அவருடைய ரூமுக்கு அடிக்கடி போகும். நான் மெஸ் எடுத்த வேளை, ஒரு தமிழ் படம் கூட இல்லை. இரண்டு பெரிய பெரிய நடிகர்களைப் (ஹிந்தி) போட்டு இரண்டுக்கும் ஷூட்டிங் நடக்கும். 10 நாள்களுக்கு 1 முறை வீதம் பில்லுக்குப் பணம் பெற்றுக் கொள்ளவேண்டும். ஹிந்தி நடிகர்களுக்கு டிபன் காபி மட்டும். மற்ற ஷூட்டிங் சம்பந்தப்பட்டவர் களுக்குத் தேவையானவைகளைக் கொடுக்க புரோகிராம் கொடுக்கும் படிதான் கொடுக்கவேண்டும்.

இப்பொழுது உங்களை ஜெமினி ஸ்டூடியோவே நடத்திய மெஸ்சுக்கு அழைக்கிறேன். அப்பொழுது சந்திரலேகா ஹிந்தி டப்பிங் வேலை மும்முரமாக ஆரம்பம். ஹிந்தி வசனம் எழுதுவதற்கு மிகப் பிரபலமான ஹிந்தி கதை வசனகர்த்தா பம்பாயிலிருந்து பண்டிட் இந்திரா என்பவரும் ஹிந்தி குரல் பேசுவதற்கு இந்திரா அலெக்சாண்டர் என்று ஆங்கிலோ இந்திய பெண்மணியும் சென்னையில் வசித்த முக்கர்ஜி என்ற

ஹிந்தி பண்டிட்டும் அமர்த்தப்பட்டனர் இதில் முக்கர்ஜி இவர் மட்டும்தான் இளைஞர், இவர் சென்னைவாசி ஆகையால், தமிழும் ஆங்கிலமும் ஹிந்தியும் சரளமாக நன்றாகப் பேசுவார். தவிர நடிகர்கள் திலீப் குமார், அசோக்குமார், தேவானந்த், ஆகா, டேவிட், பிரேம்னாத் மன்மோஹன் கிருஷ்ணா, மிகப் பிரபலமான நடிகர் மோதிலால், பிருத்விராஜ், ராஜ்கபூர் இவர்களுக்கெல்லாம் கன்னிமரா ஹோட்டலில் தங்க வசதி செய்யப்பட்டிருக்கும். சிலர் தங்க நுங்கம்பாக்கத்தில் நிரந்தரமாக ஒரு கெஸ்ட் ஹவுசும் இருக்கும் ராஜ்கபூரின் தந்தை பிருத்விராஜ் மட்டும் மைலாப்பூர் உட்லான்ட்ஸ்ஸில் தங்குவார். அது தான் அவருக்குப் பிடித்தமானது. ஷூட்டிங்கு வருவதற்கு 2 நாள் முன்பாகவே உட்லாண்ட்சில் அவருக்கு ரூம் ரிசர்வ் செய்து விடுவார்கள். இதில் ஒரு வேடிக்கை. உட்லாண்ட்ஸ் ஓட்டலில் அசைவம் சாப்பிட அனுமதியில்லை, இருந்தாலும் பிரித்விராஜுக்கு அசைவம் சாப்பிடுவதற்கு ஸ்டூடியோவில் ஒரு ரூம் தயார் செய்து சாப்பாடு கொண்டு வந்ததும் பிருத்விராஜ் அவர்கள் சாப்பிட்டு விட்டு உட்லாண்ட்சுக்கு சென்றுவிடுவார்.

ஹிந்திக்காரர்களாகிய இவர்களும் ஷூட்டிங் ஸ்டோரி டிஸ்கஷனில் கலந்துகொண்டு ஐயருடன் மெஸ்சிலேயே சில சமயம் சாப்பிட வருவார்கள். இவர்களுக்கென்று ஸ்பெஷலாக. முந்திரிப் பருப்பு திராட்சை, நெய், எல்லாம் நிறைய போட்டு ரவாகேசரி காலையில் பூரியும், மத்தியம் சாதத்துடன் வழக்கமான மெஸ் ஐட்டம் ஒரு பொரியல், அப்பளம், சாம்பார், ரசம், தயிர், ஊறுகாய். இரவில் ஒரே ஒரு பொரியல் மட்டும்தான். ஹிந்திக்காரர்களுக்கும் ஐயர் ரூமில் சாப்பிடும் மற்ற கதை இலாகாவினர்களுக்கும் இவை பரிமாறப்படும். இவர்கள் சாப்பிட வருவதற்கு 5 நிமிடம் முன்பாக வருகிறார்கள் என்று எங்களுக்குத் தகவல் வரும். உடனே பூரியைப் பொரிக்க ஆரம்பித்து முதலில் பொரியல்

பரிமாறி பிறகு கேசரியைப் பரிமாறுவோம். அடுத்துச் சுடச்சுடப் பலூன் மாதிரி உப்பலாக இலைக்கு பூரியை முதலில் இரண்டிரண்டாக பரிமாறுவோம். பூரியைப் பிய்த்து கேசரியுடன் சேர்த்து சாப்பிட்டு விட்டு, பின் சாதம் நெய் சாம்பார் அப்பளம், அதன் பின் ரசம் பின்னர் ஏடு நிறைந்த தயிர், சாதத்துடன் கலந்து சாப்பிட்டால்; இதைத் தொட்டுக் கொள்வதற்கு ஊறுகாய் இருந்தாலும் தயிர் சாதத்திற்குச் சாம்பார் சேர்த்துச் சாப்பிட்டால் பராசக்தியில் கலைஞரின் வசனத்தை நடிகர் திலகம் சிவாஜி அவர்கள் பேசுவது (கோர்ட்சீன்) மாதிரி பிரமாதமாக இருக்கும். ஒவ்வொரு வாய் கேசரிக்கும் நான்கு முழு முந்திரிப் பருப்பும் இரண்டு திராட்சையும் இருக்கும். ஏடு நிறைந்த தயிர். பாலை நன்றாக காய்ச்சி அரை மணி நேரம் அப்படியே ஆறவைத்து உறை ஊற்றினால் பாலின் மேல் கட்டியாய் ஆடை மாதிரி இருக்கும். இதுதான் ஏடு என்பது. இதை சாதத்துடன் கலந்து கையால் சாப்பிட்டால் கையைச் சீயக்காய் பொடி போட்டுத்தான் கழுவ வேண்டும். மெஸ்ஸில் சாப்பிடும் ஹிந்திக்காரர்கள் அனைவரும் ஜெமினியின் ரசத்தை டம்ளரில் வாங்கிக் குடிப்பார்கள். ஜெமினி மெஸ்ஸின் ரசத்தை குடிக்காத (ஜெமினி ஸ்டூடியோவிற்கு வந்த) ஹிந்திக்காரர்களே கிடையாது என்று சொல்லலாம். இவைகள் ஜெமினி ஸ்டூடியோவே நடத்திய மெஸ்சில் நான் வேலையில் இருந்த சமயம் நடந்தவைகள்.

நான் ஜெமினி மெஸ்ஸை நடத்திய சமயம். இரண்டு ஹிந்தி படங்கள் எடுக்கப்பட்டு வந்தன. ஒன்று, தமிழில் வெளிவந்த மங்கம்மா சபதம், மங்களா என்ற பெயரில் ஹிந்தியிலும் தெலுங்கிலுமாக, பானுமதி கதாநாயகி இரண்டிலும். ராஜ்குமார் என்பவர் கதாநாயகர் இரண்டிலும். மற்றொரு படம் பால நாகம்மா. இது தெலுங்கில். ஜெமினி ஸ்தாபனத்தார் காஞ்சனமாலா என்ற பேரழகியை இவர் கதாநாயகியாகவும் சுப்பராவ் என்ற புதுமுக நடிகரையும் மாயலமராட்டி என்ற

பெயரில் முதல் படத்திலேயே பிரமாதமாக நடிக்கவைத்தனர். நடித்து பெயரும், புகழும் அடைந்தவர். விட்டலாசார்யாவின் படங்களுக்கு முன்னோடி இதுதான். பால நாகம்மா ஜெமினியின் மாஸ்டர்பீஸ். பாக்ஸ் ஆபீஸ் ஹிட். காஞ்சனமாலாவின் அழகைக்கண்டு பலர் பைத்தியம் ஆனார்கள். இப்பொழுதுள்ள நடிகைகள் கவர்ச்சி என்ற பெயரில் முக்கால் நிர்வாணத்தில் நடித்து எதற்கும் தயாராக இருப்பதுபோல் நடப்பவர் அல்ல காஞ்சனமாலா. முழங்கை வரை ரவிக்கை, தரையைத் தொடும் அளவு புடவை கட்டிக்கொண்டுதான் நடித்தார். அவரது முகம், கை, கால் தவிர வேறு எதையும் பார்க்க முடியாது. திலீப்குமார் கதாநாயகனாக நடித்தார். காஞ்சன மாலா நடித்த வேடத்தில் மதுபாலா என்ற மிகப்பிரபலமான நடிகை நடித்தார். தமிழ்படங்கள் இல்லாததால் எனக்கு வியாபாரம் அலுத்து விட்டது. மாதம் ஒன்றாம் தேதியும், 3-ந்தேதியும் தான் எங்கள் மெஸ்சில் சாப்பிட்டவர்களின் பணம் டோக்கன் புக் விற்றது. மூவாயிரம் சில மாதங்களில் 500 சேர்த்து வரும். ரெகுலராக ஷூட்டிங் இருந்தாலும் அதன் வியாபாரம் 10 நாள்களுக்கு ஒரு முறை வீதம் பணம் வரும். இப்படி இருக்கையில் ஒருநாள் பகல் ஐயருக்கு சாப்பாடு வேண்டும் என்று அவருடைய ஆபீஸ் பாய் கேட்டான். உடனே நான் டிபன் கேரியரில் ஒருவருக்கு தேவையான கறி கூட்டு, சாதம் சம்பார், ரசம், அப்பளம், தயிர், ஊறுகாய் எல்லாம் எடுத்துக்கொண்டு நானே போய் அய்யருடைய ரூமில் இலையைப் போட்டு பரிமாறினேன். சுமாரான சமையல்தான். ஆனால் ருசியாக சாப்பிடும்படியாகத்தான் இருக்கும். ஜெமினி ஸ்டுடியோ மெஸ் மாதிரி பிரமாதமாக இருக்காது. காரணம் அது கம்பெனியில் உள்ளவர்களைத் திருப்திப்படுத்துவதற்காக நடத்தப்பட்டது. லாப, நஷ்டத்தைப்பற்றிக் கவலை கிடையாது. செலவுகளை அந்த அந்தப் படக்கணக்கில்

சேர்த்துவிடுவோம். மெஸ்சும் 32வது டிபார்ட்மெண்டாக செயல்பட்டு வந்தது. ஆனால், இப்போதோ மற்றவர்களுக்கு லாபம் வந்து, வேலையாட்களுக்குச் சம்பளம் கொடுத்து, பின் மளிகையில் இவைகளுக்கெல்லாம் போக, எனக்கு லாபம் கிடைக்க மிகச் சிரமமாக இருந்தது.

இதற்கு முன் பலதடவைகள் ஜெமினி ஸ்டூடியோ மெஸ்சாக இருந்தபோது ஐயர் ரூமுக்குச் சாப்பாடு கொண்டு போய் பரிமாறிய நிகழ்ச்சி எனக்கு நினைவிற்கு வந்தது. ஆனந்த விகடனில் தொடர் கதை எழுதி வந்த லக்ஷ்மி என்ற திரிபுரசுந்தரி அவர்களுக்கும் ஐயருக்கும் லக்ஷ்மியின் கணவர் ச.மு.பிள்ளை (மலேசியா) யுடனும் பின் புஷ்பவல்லியுடனும் ஐயர் சாப்பிட்டிருக்கிறார். இவர்களுக் கெல்லாம் நானே ஐயர் ரூமுக்குச் சென்று சாப்பாடு போட்ட நாள்கள் எனக்கு நினைவிற்கு வந்தது. அந்த சாப்பாட்டிற்கும் இன்று என்னுடைய சாப்பாட்டிற்கும் உள்ள வித்தியாசம் ஓட்டல் சாப்பிட்டிற்கும், வீட்டு சாப்பாட்டிற்கும் உள்ள வித்தியா சத்தை நானே உணர்ந்தேன்.

சாப்பிட்டு முடிந்ததும் வாசன் அவர்கள் என்னைக் கூப்பிட்டு பேசினார். இன்னும் 3 மாதங்கள் பொறுமையாக இருந்து மெஸ்சை நடத்து. 2 தமிழ் படங்கள் எடுக்கப் போகிறேன். உனக்கு நல்ல வியாபாரம் நடக்கும். அது வரை உனக்கு ஏதாவது பண உதவி வேண்டுமானால் வாங்கிக்கொள். உன் சாப்பாடு பரவாயில்லை. ஜெமினியின் தரத்திற்குப் போட உன்னால் முடியாது தெரியும். ஆனால் வேறு ஒரு நல்ல சமையல்காரரை வைத்துக்கொள். அவருக்குச் சம்பளம் நானே ஆபீசிலேயே கொடுக்கச் சொல்கிறேன் என்றார்.

என் முதலாளி வாசன் அவர்களின் இந்த பேச்சு என்னைச் சொல்ல முடியாத மகிழ்ச்சிக் கடலில் மூழ்கடித்து பின் கரை ஏற வைத்தது. எவ்வளவு பெரிய மனிதர். ஒரு சாதாரண ஊழியன் தன்னுடைய ஸ்தாபனத்தில் வியாபாரம் செய்து

நஷ்டம் அடைந்துவிடக் கூடாது என்ற நல்ல எண்ணத்தின் காரணமாக சொன்னார். நான் அப்பொழுது எவ்வளவு ரூபாய் கேட்டிருந்தாலும் கொடுத்திருப்பார். நான் அப்பொழுது கேட்டதோ வெறும் 500 ரூபாய். உடனே உள்ளே போய் தன் P.A. நம்பியாரிடம் சொல்லி சீப் அக்கௌண்டன்டிடம் தகவல் கொடுத்து விட்டார். நானும் முதலாளியை இருகரம் கூப்பி வணங்கி சரி சார், தங்கள் சொல்படி நடக்கிறேன் என்று மகிழ்ச்சியுடன் விடைபெற்றுக் கொண்டு வந்தேன். பின்னர் இது நடந்த ஒன்றரை மாதங்கள் சென்றுவிட்டது. ஒருநாள் மாலை 4 மணி இருக்கும் ஷூட்டிங் சம்பந்தப்பட்டவர்கள் டிபன் சாப்பிட்டுக் கொண்டிருக்கிறார்கள்.

அப்பொழுது ஒருவர் ஆஜானுபாகுவாக கம்பீரமாக தோற்றம், பைஜாமா ஜிப்பா, லேசாக நரை முடியின் ஆரம்பம். என் மெஸ்சுக்கு வந்தார். அவர்தான், மிகப் பிரபலமான ஹிந்தி குணச்சித்ர நடிகர். மகாத்மா காந்தியையே சினிமா பார்க்க வைத்தவர். (மகாத்மா காந்தி பார்த்த படம் ஹிந்தியில் வெளி வந்த ராம்ராஜ்யா பிரேம் அதீப் என்ற முஸ்லீம் நடிகர் ராமராகவும், சீதையாக சோபனா சம்ரத்தும் நடித்தது. வசூலிலும் பாக்ஸ் ஆபீஸ் ஹிட்டானது. எல்லா வகைகளிலும் மிகச் சிறந்த படம். 10 நிமிடங்கள்தான் படம் பார்க்க மகாத்மா நேரம் ஒதுக்கியிருந்தார். ஆனால் சுபம் போடும் வரை படத்தைப் பார்த்தார். அதைச் செய்தவர்தான் என் மெஸ்ஸுக்குள் வந்திருக்கும் பிரித்விராஜ் கபூர் என்றவர். (ராஜ்கபூர், சசிகபூர், ஷம்மிகபூர் என்ற நடிகர்களின் தந்தை) நான் மிக பரபரப்படைந்து ஆயியேஜி ஆயியேஜி நமஸ்கார் என்று கை கூப்பி வரவேற்றேன். அவர் க்யா நாஸ்தா என்று கேட்டார். நான் எனக்கு தெரிந்த அரைகுறை ஹிந்தியில் ரவாதோசை, விஜிடேபிள் சோமாசியும் அன்றைய டிபன் என்று சொன்னேன். உடனே அவர் நின்ற, இடத்திலேயே ஒரு சேரைப் போட்டு ரவா தோசையும், சோமாசியும் ஒரு

இலையில் வைத்து அடியில் ஒரு தட்டுடன் அவரிடம் நீட்டினேன். ரவாதோசை மற்றும் (வெங்காய சட்னி) வத்தல் மிளகாய் கடலைப் பருப்புடன் சட்னி அரைத்திருந்தது அதை மிகவும் ருசித்து சாப்பிட்டார். நான் ஔர் ஏக் சீலா என்று ஹிந்தியில் கேட்டேன். அவர் நோ தேங்கஸ் என்று சொல்லிவிட்டு கை அலம்பிக்கொண்டு கித்னா பைசா என்று கேட்டார். நான் சொன்னேன் பைசா நக்கோ ஆப்கோ ஆபிஸ் அக்கௌண்ட் ஹே என்று - காசு வேண்டாம் உங்களுக்கு ஷூட்டிங்கில் ஆபீஸ் கணக்கு என்றேன். அவர் புரிந்து கொண்டு அச்சா பஹூத் அச்சா என்று திரும்பியவர் அங்கே லக்ஷ்மி, சரஸ்வதி, வினாயகர் படங்களுடன் ஒரு காலண்டர் படத்தைப் பார்த்துவிட்டு ஓ ஆத்மி கோன் ஹை என்று கேட்டார். அது பெரியார் ஈ.வே.ரா. அவர்களின் உருவமுடைய அந்த வருடத்து காலண்டர். அதில் பெரியாரின் வெண்தாடியுடன் பக்கவாட்டில் அச்சிடப்பட்டிருந்தது. அசப்பில் ரவீந்தரநாத் தாகூரின் படங்களைப் பார்த்து அம்மாதிரி எடுக்கப்பட்டிருந்தது. நான் சொன்னேன் ஓ ஆத்மி சௌத் இந்தியன் லீடர் என்றும் பெரியார் ராமசாமி நாயக்கர் என்றும் கூறினேன். அவர் அச்சா சொல்லிக் கொண்டே விடைபெற்றுக் கொண்டார்.

பிரித்விராஜ் அவர்கள் சென்றதும் அவரும் நானும் பேசிக்கொண்டதை அசைபோட்டுக் கொண்டிருந்தேன். அந்த அசைவை வாசகர்களுக்கும் தெரிவிக்கிறேன். எனக்குத் தெரிந்த பாதி ஆங்கிலத்திலும் பாதி ஹிந்தியிலும் மீதி தமிழிலும் பேசியவைகள் பெரியார் ராமசாமி நாயக்கர் கடவுளை மறுப்பவர். பிராமணர்களை எதிர்ப்பவர். இவருடைய படத்தை நீ ஏன் மாட்டியிருக்கிறாய்? என பிரித்விராஜ் கேட்டார். நான் சொன்னேன், கொள்கை மாறுபாடு இருக்கும். ஆனால் பகைமை உணர்வு இருக்காது. அந்தக் காலண்டரை யார் போட்டிருக்கிறார் பாருங்கள் என்று அதை எடுத்துக்காட்டினேன். அதில் நேரு நியூஸ் மார்ட்

மைலாப்பூர், மதராஸ் - 4 என்ற விலாசம் இருந்தது. கேலண்டர் போட்டவர் காங்கிரஸ்காரர். காலண்டரில் இருப்பவர் திராவிடக்கழகத் தலைவர். எனவே எங்கள் தமிழ்நாட்டில் அரசியல் சமூகப்பகைமை இருக்காது என்று கூறினேன். இதைக் கேட்ட பிருத்விராஜ் அவர்கள் என் கை பிடித்து குலுக்கினார்.

இந்தப் பெரிய நடிகர் பம்பாயில் ''தீதார்'' என்று ஒரு நாடகம் போட்டார். அந்த நாடகம் சுமார் இரண்டாண்டு காலம் இடைவிடாமல் நடந்ததாம். அப்பொழுது இந்து முஸ்லீம் கலவரம் பயங்கரமாய் நடந்து இருதரப்பிலும் பாதிக்கப் பட்டவர்கள் அப்பாவி ஏழைகள்தான். ஒவ்வொரு நாளும் இவர் நாடகம் முடியும் தருவாயில் வெளியே செல்லும் கேட்டில் நின்று கொண்டு தன்னுடைய மேல் அங்கவஸ் திரத்தை பிரித்து தன் இருகைகளாலும் காட்டுவார். நாடகம் பார்த்து வெளியில் வருபவர்கள் எல்லோரும் 100 ரூபாய் 50 ம் 10 -ம் நோட்டுகளாகவும் பணமாகவும் போடுவார்கள். இதை எல்லாம் எண்ணி வகுப்புக் கலவரத்தில் பாதிக்கப்பட்ட இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் சரிபாதியாக நேரடியாக இவரே போய் கொடுத்துவரும் பழக்கத்தைக் கொண்டிருந் தாலும் தீதார் நாடகக் கதையும் ஹிந்து முஸ்லீம் கலவரத்தை மையமாக ஆனால் எந்த வகுப்பினரும் புண்படாத வகையில் அமைக்கப்பெற்ற உணர்ச்சிகரமான நாடகம். ஆகையால்தான் ஆண்டுக்கணக்கில் நடந்ததாக பிருத்விராஜின் படத்தை அட்டையில் போட்டு நாடகத்தைப்பற்றி பேராசிரியர் கல்கி அவர்கள் எழுதி இருந்தார்கள். பிருத்விராஜ் அவர்களும் நேருவின் ஆட்சியில் *M.P.* ஆனார். சிறந்த தேசியவாதி. மிகச்சிறந்த நடிகர் எல்லாவற்றிற்கும் மேலாக மிகச் சிறந்த இந்தியக் குடிமகன்.

முதலாளி வாசன் அவர்கள் சொன்ன மூன்று மாதங்கள் எங்களால் மெஸ்ஸை நடத்த இயலவில்லை. எனவே வேறு வழி இன்றி கோபாலகிருஷ்ணனுக்கு எழுதி கொடுத்தது போல் எழுதிக்கொடுத்து விட்டேன். இதை நிர்வாகமும்

ஒப்புக்கொண்டு எங்கள் ராஜினாமாவை ஏற்றுகொண்டு எங்களை மார்ச் 31 தேதி 1963 விடுதலை செய்தது. ஜெமினி ஸ்டுடியோ மெஸ்சில் 11 ஆண்டு காலம் சர்வீஸ் வேலையாளாக இப்பொழுது மெஸ் முதலாளியாக 9 மாதம் சர்வீஸ்.

எங்கள் குழலோசை எல்லோர்க்கும் இன்பம் தரும் என்ற வார்த்தை இருக்கிறது. இன்பம் தந்த சின்னமும் இல்லை. இந்தச் சின்னம் தந்த இன்பமும் இல்லை இன்று. இந்த இன்பத்தை மறந்துவிட்டு எத்தனை கோடி இன்பம் தந்தாய் எங்கள் இறைவா! என்ற பாரதியாரின் பாடலே நமக்கின்பம்.

ஒவ்வொரு ஆண்டிலும் பெரியார் ஈ.வே.ரா. அவர்களின் பிறந்த நாளில் வாசன் அவர்கள் பெரியாரின் இல்லத்திற்குச் சென்று வருவார். அப்படி அவர் பெரியாரைப் பார்த்துப்பேசி நலன் விசாரித்துவிட்டு திரும்பும் சமயம் ஒரு கவரை பெரியாரிடம் கொடுத்து விட்டுச் செல்வார். வாசன் அவர்கள் போனதும் பெரியார் அவர்கள் கவரைத் திறந்து பார்ப்பார் அதில் 5000 ரூபாய் இருக்கும். இதைப் பெரியார் அவர்களே வாசன் மறைந்தபோது விகடனில் பேட்டியில் சொல்லிருக் கிறார்.

அன்று ஆயுத பூஜை நம்பவர் 1ம் தேதி ஸ்டுடியோவில் எல்லா இலாகாவிலும் உபயோகப்படுத்தப்படும் பொருள் களும், உபகரணங்களும் இரண்டிரண்டு சாமான்களும் பெரிய தஞ்சாவூர் தாட் இலை (பெரிய நுனியுள்ள வாழை இலைகள்) சுமார் 10 விரித்துப் போட்டு அதில் 25 படி அவல், 25 படி பொரி, 25 படி பொட்டுக்கடலை, 10 படி வெல்லம் தூளாக்கியது மற்றும் தேங்காய் கீற்றுகள் நறுக்கிய வாழைப்பழத்துண்டுகள் எல்லாம் சேர்த்து ஒரு சிறு குன்று போல் அந்த வாழை இலைகள் மீது குவிக்கப்பட்டிருந்தன. இதைத்தவிர 25 படி கொண்டைக்கடலை சுண்டலும் ஜெமினி மெஸ்ஸிலிருந்து தயாரிக்கப்பட்டு ஒரு பெரிய அண்டாவில் வைக்கப்பட் டிருந்தது. வினாயகர், லக்ஷ்மி, சரஸ்வதி படங்களும் பெரிதாக

வைக்கப்பட்டிருந்தன. பூஜை செய்ய ஒரு சாஸ்திரிகளை அமர்த்தி அவர் ஆயுத சரஸ்வதி பூஜைக்கான மந்திரங்களைச் சொல்லிக்கொண்டிருந்தார்.

ஜெமினி ஸ்டுடியோ முதலாளி வாசன் அவர்கள் நடுநாயக மாக நாற்காலியில் அமர்ந்திருந்தார். சுமார் 100 நாற்காலிகளும், பெரிது, பெரியதாக விரிப்புகளும் போடப்பட்டிருந்தது. இலாகா தலைவர்கள் அவரவர்க்குரிய நாற்காலிகளில் அமர்ந்திருந்தார்கள். மற்றும் ஊழியர்களும் மற்றவர்களும் தரைவிரிப்பில் அமர்ந்திருந்தார்கள். ஜெமினி ஸ்டுடியோவில் பணி புரியும் எல்லா சிப்பந்திகளும், தொழிலாளர்களுடன் இந்த ஆயுத பூஜையில் கலந்து கொண்டு பூஜை முடிந்ததும் எல்லாருடைய கைகளிலும் சுமார் முக்கால் படி அளவு இருக்கும் அவல் பொரி சுண்டல் எல்லாம் சேர்த்து ஒரு பையில் போட்டுக் கொடுப்பார்கள். இதை எல்லோரும் பெற்றுக் கொண்டு தம் வீட்டுக்குச் சென்று குடும்பத்துடன் சேர்ந்து ஆயுத பூஜையைக் கொண்டாடுவார்கள். நான் வேலையில் சேர்ந்த வருடம் இதை எல்லாம் கண்டு மகிழ்ச்சி அடைந்தேன். இதே வருடம் பிரபலமான கார்ட்டுனிஸ்ட் தாணு என்பவர் ஆனந்த விகடனில் இருந்தார். இந்த ஆயுத பூஜை முடிந்ததும் ஒரு நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார். ஸ்டூடியோவிலேயே ஒரு மேடை அமைக்கப்பட்டது. ஓர் ஓரங்க நாடகம் நடத்தப்பட்டது. அது என் நினைவில் இருப்பதை கூறுகிறேன். இப்பொழுது ஜெமினி ஸ்டுடியோ *R.H.*ல் (ரிசப்ஷன் ஹாலில்) பணி புரிந்த ரங்காச்சாரி என்பவருக்கு அடால்ப் ஹிட்லரைப் போல் மேக்கப்பும் உடையும் அணிவித்து மேடையில் ஜெர்மானிய வீரர்களுக்கு வீர உணர்ச்சியைப் பிரமாதமாக ஆங்கிலத்தில் உரை யாற்றினார். ரங்காச்சாரி அவர்களுக்கு ஹிட்லரின் வேஷப் பொருத்தம் மிக நன்றாக அமைந்திருந்ததால் பார்வையாளர் களிடமிருந்து ஏகப்பட்ட கைதட்டல்களைப் பெற்றுக்

கொண்டார். இக்காலத்தில் இரண்டாம் உலக யுத்தம் நடந்துகொண்டிருந்தது. இந்திய சினிமா படங்கள் 11 ஆயிரம் அடிகளுக்கு அதிகமாக படம் எடுக்கக்கூடாது என அன்றைய அரசாங்கம் சட்டம் போட்டது. அதுவும் இல்லாமல் எல்லா தியேட்டர்களிலும் இரண்டாயிரம் அடிக்கும் குறையாமல் செய்திப் படம் (யுத்த சம்பந்தம்) அதுவும் ஆங்கில அரசுக்கு சாதகமாகவே செய்திகள் இருக்கவேண்டும். இந்த செய்திப் படத்தை ஒவ்வொரு தியேட்டரும் காட்டிய பிறகுதான் மற்ற படத்தைக் காட்டவேண்டும் என்று கட்டாய சட்டமாக்கியது அரசாங்கம்.

அரசாங்கத்தின் இந்த 11 ஆயிரம் அடிக்குமேல் எடுக்கக் கூடாது என்ற சட்டத்தை கடுமையாக எதிர்த்தவர் ஜெமினி அதிபர் எஸ்.எஸ். வாசன் அவர்கள். இதைத் தீவிரமாக ஆதரித்தவர் பேராசிரியர் கல்கி அவர்கள். இது பெரிய விவாதமாகி தமிழ் மகன் என்ற பெயரில் கல்கி அவர்கள் 20 ஆயிரம், 18 ஆயிரம் அடிகள் என்ற எண்ணிக்கையுடன் வந்த தமிழ் மசாலாப் படங்களைத் தாக்கி கிழி, கிழி என்று கிழித்து எழுதப்பட்ட கட்டுரைகள் இன்னும் கூட புற்றீசல்போல் வெளிவந்து கொண்டிருக்கும் படங்களுக்கும் மிகப் பொருத்தமாக இருக்கும்.

கார்ட்டுனிஸ்ட் தாணு அவர்களின் டைரக்‌ஷனில் ஹிட்லருக்கு பின், ஸ்வாமி விவேகானந்தர் அவர்களின் சிகாகோ பிரசங்கம் அரங்கேறியது. 22 வயதுடைய வாலிபர் ஒருவர் சற்று குள்ளமானவர் ஸ்வாமி விவேகானந்தர் வேடத்தில் ஸ்வாமிஜியின் பிரசங்கத்தை மிகமிக அழகாக ஆங்கிலத்தில் பேசி அமோகமான பாராட்டுதல்களைப் பெற்றார். இவர்தான் ஜெமினி தயாரித்த மிஸ். மாலினி என்ற படத்தில் கொத்தமங்கலம் சுப்புவின் ஆபீஸ்பையனாக முதன் முதலில் நடித்துப் பின்னாட்களில் மூன்று தலைமுறை நடிகராக நடித்து மறைந்த V. கோபாலகிருஷ்ணன் என்ற இளைஞர்.

ஜெமினி ஸ்டூடியோ சிறந்த நிர்வாகத்திற்குப் புகழ் பெற்றது. எவ்வளவு பெரிய மனிதர்களும் எந்தத் துறையினராக இருந்தாலும் சரி ஸ்டூடியோவிற்குள் நுழைய முடியாது. முதலாளி திரு. வாசன் அவர்களைச் சந்திக்கவேண்டும் என்றால் இரண்டு *P.R.O.* க்கள்

1. பிரைவேட் செகரட்டரி இவர்கள் மூன்று பேர்களில் யாராவது ஒருவருடைய அனுமதி கிடைத்தால்தான் திரு.வாசன் அவர்களைச் சந்திக்க முடியும். அந்த மும்மூர்த்திகள் இதோ.

(1) கீ. ராமசந்திரன் *M.A.* அவர்கள் வாசனின் பிரைவேட் செகரட்டரி. வாசன் அவர்களின் பொருளாதாரம் இவருடைய நுனி விரலில் இருக்கும்.

(2) மற்றொருவர் க.க. நம்பியார் *M.A.* இவர் ஒரு *P.R.O.* மிகச்சிறந்த முறையில் பணியாற்றியவர். ஸ்டூடியோவில் எந்தச் சிப்பந்தியோ தொழிலாளியோ ஒரு சாதாரண ஊழியனாக இருந்தாலும் அவரது தகவலை திரு.வாசன் அவர்களுக்குத் தெரிவித்து வாசன் அவர்களின் பதிலையும் பெற்றுத் தருவார். வரும் நபர்களின் தரத்தைப் பார்த்து இவர்களாகவே (*P.R.O.* க்கள்) பதில் சொல்லி அனுப்பி விடுவார்கள். ஆனால் இவர் அப்படி அல்ல. எல்லாருடைய நன்மதிப்பையும் பெற்றவர்.

(3) மற்றொருவர் இன்றைய தமிழ் இலக்கிய படைப்பாளிகளில் முதல் வரிசையில் இருக்கும் திரு. அசோகமித்திரன் என்ற *J.* தியாகராஜன் அவர்கள். மூவரில் இவருக்குத்தான் அதிகப்படியான வேலையும், சிறு சிறு பிரச்னைகளையும், மிகவும் பொறுமை யாகவும், சாமர்த்திய மாகவும் எவருடைய மனதையும் நோக அடிக்காமல் நல்ல பெயர் எடுத்தவர். ஸ்டூடியோவில் இவருக்கு மற்றொரு பெயர் பரமசாது என்று. இவர் எனக்கும் நண்பர்.

சீப் எக்ஸிகியுட்டிவ் திரு. ராமய்யர் அவர்கள் ஜெமினி ஸ்டூடியோ முதல் நிலை மானேஜர். மிகவும் கண்டிப்பானவர்.

ஸ்டுடியோவில் சட்டத்திட்டங்களுக்குத் தானும் கட்டுப்படு வார். மற்றவர்களையும் கண்டிப்பாகக் கட்டுப்பட வைப்பார். பார்ப்பதற்கு நல்ல உயரம் அதற்கேற்ற உடல், உருண்டை முகம், நெற்றியில் சந்தனம், நடுவில் குங்குமம் ஜிப்பா (மேட்டூர் மல்) சரிகை சிறிய அளவில் 8 முழ வேஷ்டிமேல் சரிகை அங்கவஸ்திரம். இவரையும், திரு.வாசன் அவர் களையும், ஒன்றாக யாராவது பார்த்தால் இவரைத்தான் முதலாளி என்பார்கள். வாசன் அவர்களின் உடை 8 முழம், சேலம் குண்டஞ்சி என்ற வேஷ்டி முழங்காலுக்குச் சற்று கீழே தொங்கும். பனியன் தொள தொளவென்ற கதர் அரைக்க கை ஒப்பன் காலர் வைத்த சட்டை. தோளில் விசிறி மடிப்பு அங்கவஸ்திரம் (இது பெரும்பாலும் அறையில் இவருடைய நாற்காலியில்தான் இருக்கும். வெளியில் செல்லும் பொழுதுதான் அதை அணிந்து கொள்வார்.) மற்ற சமயங்களில் தோளில் ஒரு சிறிய டவல் எப்பொழுதும் இருக்கும்.

இந்த T.R. ராமய்யரின் மிகச்சிறந்த நிர்வாகத்திற்கு ஒரு சின்னஞ்சிறு சாம்பிள். ஒரு முறை செட்டிங் டிபார்ட்மெண்ட் ஸ்டோரிலிருந்து ஒரு பெயிண்ட் டப்பாவை அங்கு வேலை செய்யும் ஒருவன் திருடி வீட்டிற்கு எடுத்து செல்லும் பொழுது ரோந்து போலீசாரிடம் அகப்பட்டுக் கொண்டு திருடிய இடத்தையும் ஜெமினி ஸ்டூடியோ வில் வேலை செய்வ தாகவும் கூறியிருக்கிறான். போலீசார் திருடனை அழைத்துக் கொண்டு ஸ்டூடியோவிற்கு வந்து மானேஜர் ராமய்யரிடம் விசாரித்தனர். அவர்களிடம் ராமய்யர் சொன்ன பதில் இது. எங்களிடத்தில் எதுவும் திருட்டுப் போகவில்லை. இவன் இங்கே வேலையும் செய்யவில்லை. இவன் யார் என்றே எங்களுக்குத் தெரியாது என்றதும் போலீசார் திருடனை அழைத்துக்கொண்டு திரும்பப்போய் விட்டார்கள்.

ராமய்யரின் உதவியாளர் ''ஸார் அந்த பெயிண்ட்டும் நம்ம கம்பெனியுடையதுதான். அவனும் இங்கே ஒர்க்ஸ் டிபவைட்

மெண்டில் வேலை பார்ப்பவன்தான் சார் என்று கூறினார். எனக்குத் தெரியும் கிருஷ்ணா (உதவியாளர் பெயர்) இந்த விவகாரம் இத்துடன் முடிந்துவிட. வேண்டும் என்றுதான். இந்த 10 ரூபாய் பெறுமான பெயிண்ட்டுக்கு கேஸ் என்று போட்டால் நம்முடைய வேலை கோர்ட்டுக்கும் ஆபீசுக்கும் அலைவதற்கு 100 ரூபாய்க்கு மேல் செலவு. வீண் அலைச்சல். பத்திரிகையில் செய்தி இவை எல்லாம் நமக்குத் தேவையா? 10 ரூபாய் பெறுமான பொருள்களும் தேவை இல்லை. அந்த திருடனும் வேலையை விட்டு அப்படியே போவதற்காகத் தான் நான் இப்படி செய்தேன் என்றார். மானேஜர் *T.R.* ராமய்யர். இப்படிப்பட்ட மானேஜருக்கும் முதலாளி *S.S.* வாசனுக்கும் இருவர்களாலும் தவிர்க்க முடியாத பனிப்போர். ஒரு நாள் மாலை 6 மணிக்கு *T.R.* ராமய்யர் வீட்டுக்குப் போகும் சமயம் இவர் எப்பொழுதும் தன்னுடைய ரிக்ஷா வண்டியில் தான் ஆபீசுக்கு வருவதும் போவதும், அவருடைய செலவிலேயே. முதலாளி வாசன் அவர்களிடம் இருந்து தொலைபேசி மூலம் தன்னை வந்து சந்திக்கும்படித் தகவல் வந்ததும், மானேஜர் ரிக்ஷாகாரனைச் சற்றுக் காத்திருக்கச் சொல்லிவிட்டு வாசன் ரூமுக்கு சென்றார். வாசன் அவர்கள் *T.R.*. க்கு ஆசனம் கொடுத்து அமரும்படி கூறினார். *T.R.* உடன் அமர்ந்தார். இதுவரைதான் தெரியும். இருவரும் ஐந்தேமுக் கால் மணியிலிருந்து இரவு 9 மணி வரை என்ன பேசினார்கள் என்பது அவர்கள் இருவருக்கும் கடவுளுக்கும்தான் தெரியும். 8 மணி சுமாருக்கு (அன்றிரவு) இரண்டு டம்ளர்களில் மெஸ்சிலிருந்து மோர் வரவழைத்து அருந்தினார்கள். பின் ஒன்பதரை மணிக்கு முதலாளி வாசனுடைய வண்டியிலேயே வாசன் அவர்களின் டிரைவரே மானேஜர் *T.R.* ராமய்யரை அவருடைய வீட்டில் (மைலாப்பூரில்) கொண்டுவிட்டு வந்த பிறகு வாசன் அவர்கள் அந்த காரிலேயே தன்னுடைய வீட்டுக்குப் போனார்.

இந்த *T.R.* மறு நாள் முதல் ஆபீசுக்கு வரவே இல்லை. இவர் வேலையில் இல்லை என்பது ஸ்டூடியோவில் வேலை செய்தவர்களுக்கு ஒரு மாதம் வரை தெரியவே தெரியாது. அந்தப் பதவிக்கு *K.V.V.* சர்மா என்று ஒரு பேர்வழி *T.R..*யின் எதிர்பதம் என்று சொல்வதற்கு சரியான நபர் வந்து சேர்ந்தார். இதற்கெல்லாம் என்ன சொல்வது.

இருட்டிலிருந்து வெளிச்சம் என்ற நூல், இன்றைய தமிழ் இலக்கிய படைப்பாளிகளில் முதல் வரிசையில் இருக்கும் திரு. அசோகமித்திரன் எழுதி கலைஞர் பதிப்பகத்தால் வெளியிட்டிருக் கிறார்கள். திரு. *A.M.* அவர்கள், நான் வேலை செய்துகொண்டிருந்த நாள்களில் ஜெமினியில் வேலை செய்து கொண்டிருந்தார். நாங்கள் இருவரும் தினமும் சந்தித்துக் கொள்வோம். ஆனால் பேசுவது மட்டும் கொஞ்சம்தான்.

மேல்படி அவருடைய இருட்டிலிருந்து வெளிச்சத்தில் அவர் ஔவையார் படத்தில் தன்னுடைய அனுபவத்தை பல பக்கங்கள் எழுதி இருக்கிறார்.

அதிலிருந்து நான் அவர் எழுதிய இரண்டை மட்டும் அவர் எழுதியபடி அப்படியே தருகிறேன்.

ஔவையார் படம் சென்னை வெலிங்டன் அரங்கில் ஓடிக்கொண்டிருந்த நாளிலேயே வாசனைப் பாராட்டி ஒரு பொது வரவேற்பு நிகழ்ச்சி அண்ணாமலை மன்றத்தில் நடந்தது. ராஜாஜி சி.பி. ராமஸ்வாமி அய்யர், ஆர்.பி. சேதுப்பிள்ளை, ராஜ மன்னார் கோவிந்தசாமிநாதன், யு,கிருஷ்ணாராவ் முதலிய பல மிகப்பெரிய பிரமுகர்கள் மிக உற்சாகமாகப் பேசிப் பாராட்டினார்கள். ஒரு சந்தர்ப்பத்தில் பெரியார் என் பிள்ளையார் உடைப்புப் போராட்டத்தை இந்தப் படம் கெடுத்துவிட்டது என்று கூறினார்.

கொத்தமங்கலம் சுப்புவுக்கென ஒரு தனிப்பாராட்டுக் கூட்டமும் நடந்தது. முந்தைய கூட்டத்தில் கலந்துகொண்ட

சிலர் இதில் இல்லை. ஆனால் இதிலும் கல்கி இருந்தார். ஔவையார் படத்திற்கு மட்டுமல்லாமல், கொத்தமங்கலம் சுப்புவின், காந்தி மகான் கதையும் இதில் பாராட்டப்பெற்றது.

அசோகமித்திரன் இந்த அனுபத்தை வைத்து தீபத்தில் கரைந்த நிழல்கள் என்ற அற்புதமான நாவல் எழுதினார்.

ஔவையார் படத்தைப் பாராட்டி பொது மக்களிடமிருந்து ஏராளமான கடிதங்கள் என் இலாக்காவிற்கு வந்து குவிந்தன. ஒரு நாளைக்கு நூறு என்ற கணக்கில் மாதக்கணக்கில், நான் ஜெமினி நிறுவனத்தில் பதிலுக்கு நன்றி தெரிவித்துக் கொண்டிருந்தேன். ஔவையார் படத்தில் முருகன் வள்ளி தெய்வானையுடன் ஔவைக்கு தரிசனம் அளிப்பது போல் ஒரு காட்சி வரும். அதை வண்ணப்படமாக அச்சிட்டு (ஆயிரக்கணக்காக) இந்த நன்றி தெரிவிக்கும் கடிதத்தோடு இணைத்து அனுப்பி வைப்போம்.

அப்படத்திற்காக ஆயிரக்கணக்கான கடிதங்கள் வந்தன. எங்கள் பதில் கை எழுத்தில்தான் இருக்கும். தமிழ் தட்டச்சு இயந்திரம் இருந்தது, ஆனால் அதை பயன்படுத்தவில்லை. வேண்டுமென்றால் வெகு எளிதாக ஒரு மாதிரிக் கடிதத்தை அச்சிட்டும் வைத்துக்கொண்டிருக்கலாம் அப்படியும் செய்ய வில்லை. ஒவ்வொரு ரசிகர் கடிதத்திற்கும் தனித்தனியாகப் பதில் எழுதப்பட்டது.

என் பேனாவிற்குத் தினம் மையிட்டுக் கொள்ளவேண்டிய அவசியம் இருந்தது. அந்த நாளில் பால் பாயிண்ட் பேனா உற்பத்தி பெருகவில்லை. தஸ்தாவேஜுகள் காசோலை முதலியன மையிட்ட பேனாவில்தான் கையெழுத்திடப்பட வேண்டும் என்ற நிபந்தனை இருந்தது. இவ்வாறு எழுத்தாளர் அசோகமித்திரன் எழுதி இருக்கிறார்.

  

சென்னையில் கேரளாவைச் சேர்ந்த கமலா சர்க்கஸ் வரப்போவதாக பத்திரிகைகளில் விளம்பரம் செய்திருந் தார்கள். இதைக்கண்ட திரு.வாசன் அவர்கள் சர்க்கஸ் முதலாளியான தாமோதரன் நாயர் அவர்களை வரவழைத்து அவரிடம் கேட்டார், உங்களுடைய சர்க்கஸ் ஒரு நாளைக்கு எத்தனை காட்சிகள்? அந்த இரு காட்சிகளுக்கும் சேர்த்து எவ்வளவு வசூலாகும்?

சர்க்கஸ் முதலாளி தினசரி இரண்டு காட்சிகள் நடந்து வோம் இரண்டுக்கும் சேர்த்து சுமார் 1500 லிருந்து 1700 ரூபாய் வரை வசூலாகும் என்றார்.

வாசன் அவர்கள் சரி. தினமும் நாள் ஒன்றுக்கு இரண்டாயிரம் ரூபாய் தருகிறேன். ஸ்டூடியோவிலேயே (1 வாரம் 7 நாள்கள்) முகாம்போடுங்கள். எனக்குத் தேவையான காட்சிகளைப் படம் எடுத்துக்கொண்டு உங்களை அனுப்பி விடுகிறேன். பிறகு நீங்கள் சென்னையில் உங்கள் காட்சி களைக் காண்பிக்கலாம் என்று கேட்டார். சர்க்கஸ் முதலாளி உடன் சரி என்று ஒப்புக் கொண்டுவிட்டார்.

மறுநாள் சர்க்கஸ் சம்பந்தப்பட்ட ஊழியர்கள். சிங்கம், புலி அடைக்கப்பட்ட கூடுவண்டிகள் 6 யானை இன்னும் சர்க்கஸ் பரிவாரங்கள் அனைத்தும் ஸ்டூடியோவிற்குள் வந்துவிட்டன. (சர்க்கசைச் சேர்ந்த பெண்கள் சுமார் 10 பேர்களுக்கு ஸ்டூடியோவின் சார்பில் நுங்கம்பாக்கத்தில் ஒரு தனி வீடு பார்த்து அதில் குடி அமர்த்தப்பட்டார்கள். பெண்கள் மற்றும் மற்றவ களுக்குச் சர்க்கஸ் முதலாளி பொறுப்பேற்றுக் கொண்டார்.

முதல் நாள் சர்க்கஸ் கம்பெனியாரின் எல்லா ஐட்டங் களையும், வாசன் அவர்களும் அவர் குடும்பத்தினர்களும் ஸ்டூடியோ சிப்பந்திகளும் பார்த்தார்கள். பின்னர் அடுத்த படியாக சர்க்கஸ் காட்சிகள் எல்லாமே படம் பிடிக்கப் பட்டது. மறுநாள் *T.R.* ராஜகுமாரி அவர்கள் சர்க்சில் பால் விளையாடுவது போல் மிகப் பிரமாதமாக காமிரா மேதை *K.*

ராம்நாத் சொல்லிக்கொடுத்தபடி கேமராமென் கமால்கோஷ் அவர்கள் அற்புதமாகப் படமாக்கினார். அப்பொழுது இன்று உள்ளது போல் கிராபிக்ஸ் முறை ஒன்றும் கிடையாது. அற்புதமான காமிரா மேதையின் திறமை மட்டுமே.

சர்க்கஸ் காட்சியைக் காண கேலரிகள் பூராவும் நிரம்பி இருப்பதுபோல் இரண்டு லாங்ச் ஷாட்டுகள் எடுக்க விரும்பினார் வாசன் அவர்கள்.

கேலரியில் உட்கார்ந்து சர்க்கஸ் பார்ப்பதற்காக ஸ்டூடியோ வில் வேலை செய்யும், சிப்பந்திகள் தொழிலாளர்கள் இவர்களுடைய குடும்பத்தார்களையே மாலைக் காட்சிக்கு அழைத்து வரும்படி கூறி விட்டார். அதன்படி எல்லாரும் இவர்கள் கேலரி பூராவும் உட்கார்ந்து இரண்டரை மணி நேரம் ஓசியில் சர்க்கசும் அப்படியே ஷூட்டிங்கும் பார்த்துவிட்டு எல்லோரும் சந்தோஷமாக வீடு திரும்பினார்கள்.

அப்பொழுது பிரபலமாகிக் கொண்டிருந்த இஞ்சிகுடி. சகோதரர்களை (நாதஸ்வர வித்வான்கள்) ஔவையாருக்காக ஒவ்வொருவருக்கும் ஆயிரம் ரூபாய் நாள் ஒன்றுக்கு என்று பேசி சுமார் ஒரு வாரம் அவர்கள் வாசித்ததை ரிக்கார்டிங் செய்துகொண்டு அவர்களைத் தக்க மரியாதையுடன் அனுப்பிவைத்தார் வாசன்.

இந்த நாதஸ்வரம் ஔவையார் டைட்டில் மியூசிக்கிலும் ஔவையாரை சோழராஜன் பிரும்மாண்டமாக வரவேற்பு கொடுக்கும் பொழுதும் இன்னும் பல இடங்களில் உபயோகப்படுத்தினார் வாசன் அவர்கள்.

ஜெமினி விகடன் அதிபர் திரு. எஸ்.எஸ். வாசன் தம் மகள் லட்சுமியின் திருமணத்தைச் சென்னையில் நடத்தியது போல யாரும் இது வரையில் நடத்தியதில்லை. இனி மேல் அது போல யாராலும் நடத்த முடியாது.

  

தமிழ் நாட்டில் இருக்கும் விகடன் ரசிகர்கள் எல்லாருமே சென்னைக்கு வந்துவிட்டார்கள். அவ்வளவு கோலாகலமாக சிறப்பாக தம்மகள் திருமணத்தை நடத்தினார் வாசன்.

அந்தத் திருமணத்தில் திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையின் நாதஸ்வரக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்திருந்தார்.

திருவாவடுதுறை ராஜரத்தினமோ என்னுடைய சொந்தக் காரில்தான் வருவேன். ஆனால் அந்தக் கார் சென்னையில் டி.வி. எஸ்.சில் இருக்கிறது என்று சொல்லி அனுப்பினார்.

எஸ்.எஸ்.வாசன் டி.வி.எஸ்.சிலிருந்து டி.என். ராஜ ரத்தினத்தின் காருக்கு கொடுக்கவேண்டியிருந்த ஏழாயிரம் ரூபாயையும் கொடுத்து அவருடைய காரை எடுத்து வரச் செய்தார். அந்தக் காரை திருவாவடுதுறைக்கு அனுப்பிவைத்தார்.

சென்னையில் அவர் தங்குவதற்கு ராயப்பேட்டை உட்லன்ட்ஸ் ஹோட்டலில் ஒரு காட்டேஜ் ஏற்பாடு செய்திருந்தார் வாசன் அவர்கள்.

லட்சுமியின் திருமணத்தின் மறு நாள் திருவாவடுதுறை ராஜ ரத்தினம் ஆயிரக்கணக்கான சென்னை நகரப்பிரமுகர்கள் கூடியிருந்த இசை நுட்பங்கள் தெரிந்த நிபுணர்கள் நிறைந்த சபையில் மிக அற்புதமாக வாசித்தார். சுமார் மூன்று மணி நேரத்திற்கும் மேலே வாசித்தார்.

மக்கள் சிறிது கூடச் சத்தமில்லாமல் ரசித்துக் கேட்டுக் கொண்டிருந்தார்கள்.

கச்சேரி முடிந்ததும் திரு.வாசன் திரு. ராஜரத்தினத்திற்குப் பொன்னாடை போர்த்தி மரியாதை செய்தார். வெள்ளித் தட்டில் ஒரு கவரை வைத்து அந்தத் தட்டுடனேயே அவரிடம் கொடுத்தார்.

அதில் ஐயாயிரம் ரூபாய்க்கு ஒரு செக் இருந்தது. அதாவது வாசன் தம் மகள் திருமணத்தில் ராஜ ரத்தினம்பிள்ளைக்குக்

கொடுத்த தொகை மட்டும் பன்னிரண்டாயிரம் ரூபாய். மற்ற செலவுகள் தனி.

இப்பொழுது திருவாவடுதுறை ராஜரத்தினம் பிள்ளையின் சங்கீதத்தையும் வாசன் அவர்களின் ரசிகத் தன்மையையும் வள்ளல் தன்மையையும் அறிந்து கொண்டிருப்பீர்கள் இன்றைய வாசகர்களாகிய நீங்கள். இதேபோல் ஒரு நாள் M.S. சுப்புலட்சுமி அவர்களும் திரு. செம்மங்குடி ஸ்ரீனிவாச அய்யர் அவர்களும் திரு.M.K. தியாகராஜ பாகவதர் அவர்களும் கக்சேரி செய்து நான்கு நாள்கள் சங்கீத ரசிகர்களை மகிழ்ச்சிக்கடலில் மூழ்கடித்தார்கள்.

திரு. வாசன் அவர்கள் மற்ற மூன்று சங்கீதக் கலைஞர் களுக்கும் தக்க மரியாதையும் சன்மானமும் குறைவில்லாமல் அளித்தார்.

திரு.எஸ்.எஸ்.வாசனைப் பற்றி கவிஞர் கண்ணதாசன் அவர்கள் சினிமாச் சந்தையில் 30 ஆண்டுகள் என்ற நூலில் எழுதியிருப்பதை இங்கே தருகிறேன்.

"நான் கவலை இல்லாத மனிதன் என்ற படத்தை எடுத்து நஷ்டம் அடைந்தபின் தொழிலில் முன்னேறியது நன்றாக நினைவு இருக்கிறது.

அதே நேரத்தில், ஜெமினி அதிபர். எஸ்.எஸ். வாசன் அவர்கள் என்னிடம் காட்டிய அன்புக்கு ஈடாக நான் எதையுமே குறிப்பிட முடியாது.

ஒரு நாள் அவர் என்னை டெலிபோனில் அழைத்தார். என்ன பிரதர் படம் எப்படி போயிற்று என்றார்.

நான் ரொம்ப சுமார் என்றேன்.

ஒன்றுக்கும் கவலைப்படதீர்கள் அடுத்தடுத்து செய்யுங்கள் என்றார்.

அன்று மாலை திரு. வாசன் அவர்களின் நிர்வாகி நம்பியார் என்னை டெலிபோனில் அழைத்தார். வணக்கம் சார்

உங்களிடம் பாஸ் சொல்லச் சொன்னார் என்றார் அழகான தமிழில்.

நான் ஜெமினிக்கு தரவேண்டிய முப்பத்திரண்டாயிரம் கேட்கப்போகிறார் என்று பயந்து கொண்டிருந்தபோது சார் உங்களிடம் பாஸ் சொல்லச்சொன்னார் அந்தக்கடனைத் தள்ளுபடி செய்துவிட்டாராம். அதனால் அதைப்பற்றிக் கவலைப்பட வேண்டாம் என்று கூறச்சொன்னார் என்றார்.

எனக்கு கண்ணீர் பெருக்கெடுத்தது.

நான் தொழிலில் ஆரோக்யமாக இருப்பது தெரிந்தும் சில பெரிய மனிதர்கள் மூவாயிரம் நாலாயிரம் ரூபாய்களைக் கூட கிட்டிபோட்டு என்னிடம் வசூலித்தபோது ஒரு பெரும் தொகையை தள்ளுபடி செய்த வாசனை நான் எப்படி மதித்திருப்பேன்.

வாசன் ஐந்து ருபாய் சம்பளத்திலிருந்து முன்னேறியவர். கஷ்டப்படுகிறவர்களைக் கண்டால் அவரும் அழுது விடுவார். உருக்கமான சங்கீதத்தைக் கேட்டால் அழுது விடுவார் அவர். என் மனதில் நீங்காத இடம் பெற்றுவிட்டார்.

இந்த சினிமா உலகத்திலேயே நான் அதிகமாக நேசிப்பதும் மதிப்பதும் எனக்கு முதன் முதலில் முதலாளியாக இருந்த திரு.T.R. சுந்தரம் அவர்களைத்தான்.

திரு.எஸ்.எஸ். வாசன் அவர்கள் அவரையும் தாண்டி ஒரு படி அதிகமாகவே என் மனதில் இடம் பெற்றார். அதன் பிறகு வாசன் படங்கள் பலவற்றுக்கு நான் பாடல்கள் எழுதி யுள்ளேன். ஒரு படத்திலாவது பழைய கடனுக்குக் கொஞ்சம் பிடித்துக்கொள்கிறேன் என்று அவர் சொன்னதில்லை. உயர்ந்த குடும்பத்தில் பிறந்தவர்கள் எப்போதும் உயர்வாகவே நடந்துகொள்வார்கள். இத்தகைய உத்தமர்கள் இன்றைய சினிமா உலகத்தில் குறைவாகத்தான் இருக்கிறார்கள் என்பதும் உண்மை.

ஜெமினி ஸ்டுடியோ மானேஜர் திரு.T.R. ராமையருக்கும் முதலாளி திரு.வாசன் அவர்களுக்கும் நடந்த பனிப்போரில் ராமய்யரைத் தன் காரிலேயே (ராமய்யரே எழுதிக்கொடுத்த ராஜினாமா கடிதத்தை) பெற்றுக்கொண்டதும். ராமய்யரின் வீட்டில் கொண்டுவிட்டு டிரைவர் வந்தபின் தன் இல்லம் சென்றுவிட்டார் வாசன். இதன் பிறகு பல மாதங்கள் கழிந்துவிட்டது.

T.R. ராமய்யர் ஸ்டூடியோவைவிட்டபின் வேறு எங்கும் வேலைக்கு செல்லவில்லை என்றும், வீட்டு வாடகை, பால்காரர், மளிகை கடை இவர்களுக்கெல்லாம் கடன் பாக்கி வைத்திருக்கிறார் என்றும் நாரதர் ஸ்ரீனிவாச ராவ் வாசன் அவர்களிடம் கூறி இருக்கிறார்.

இதைக்கேட்ட வாசன் அவர்கள் அப்படியா? என்று கேட்டுவிட்டு தன். P.R.O. நம்பியாரை அழைத்து ஏதோ பேசினார்.

அடுத்த நாள் காலை 10 மணிக்கு G.P.C. எனும் ஜெமினி பிக்சர் சர்க்யூட்டில், J.R. ராமய்யர் ஜெனரல் மானேஜர் பதவியில் அமர்த்தப்பட்டார். G.P.C. யில். வாசன் அவர்களின் மாப்பிள்ளை (மருமகன்)யும் ஒரு உயர் பதவியில் இருந்தார். இதை விட உயர்ந்த பதவி T.R. ராமய்யருக்கு மாதம் இரண்டாயிரம் சம்பளம்.

இதிலிருந்து திரு.எஸ்.எஸ். வாசன் அவர்களின் மனமும் பண்பும் எப்படிப்பட்டது என்பதை அறியலாம். மனிதருள் மாணிக்கம் என்று பண்டித ஜவஹர்லால் நேருஜீயைக் கூறுவார்கள் இந்திய மக்கள். அதே போல் நியாய உணர்வு உள்ள தொழிலாளர்களும் மற்ற சிப்பந்திகளும் இன்றைக்கும் முதலாளிகளில் மாணிக்கம் எஸ்.எஸ். வாசன் என்று கூறிக்கொண்டிருக்கிறார்கள். என் குடும்ப அங்கத்தினர் யாரும் இன்னும் மறக்காமல் இருப்பதால்தான் ஜெமினி கேட்ரிங்

சர்வீஸ் என்று பெயர் வைத்துள்ளேன். எங்கள் இல்லத்தின் பெயரும் ஜெமினி இல்லம்தான். ஜெமினி படங்கள் எல்லோர்க்கும் இன்பம் தந்துகொண்டிருந்தது. என் அனுபவப் படைப்பான இந்நூலைப் படிப்பவர்களும் 'யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற உணர்வை அடைவார்கள் என நம்புகிறேன்.

வாசனின் நூற்றாண்டை ஒட்டி இந்நூல் வெளியாவதில் மிகவும் மகிழ்ச்சி அடைகிறேன். இந்நூலின் சில பகுதிகள் விகடன் வாசன் நினைவு மலரிலும் குமுதம் ஜங்ஷனிலும் வெளியானது. அவர்களுக்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

*A.N.S.* மணியன்
22, 2வது மாடி, நமசிவாயம் தெரு,
கேலக்சி பில்டிங், சென்னை - 5.
போன் : 55853863

தஞ்சாவூர் பட்சணக்கடை,
ஜெமினி கேட்டரிங் சர்வீஸஸ்,
17, பிள்ளையார் கோவில் தெரு,
சென்னை - 600 005.
போன் : 28544531

# ஜெமினி கேண்டீன்







சாந்தி

ஏ. என். எஸ். மணியன்